மாயவரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 13 மைல்) அதற்குத் தெற்கு 1½-கடிகையில்.

109 திருவாக்கூர் (என்பது தான்றோன்றிமாடம்) சுவாமி சுயம்புநாதேசுவரர் அம்மன் வாள்நெடுங்கண்ணி குமுத தீர்த்தம், திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே மாயவரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 13 மைல்) அதற்குத் தென்கிழக்கு 2½-கடிகையில்

110 திருக்கடவூர் சுவாமி அமுதகடேசுரர் காலசங்கார மூர்த்தி அம்மன் அபிராமியம்மை அமுததீர்த்தம் வில்வவிருக்ஷம் இஃதட்ட வீரட்டத்திலொன்று மார்க்கண்டேயர் செய்துவந்த சிவபூசைக்கிரங்கிச் சிவபிரான் இயமனை யுதைத்து அம்முனிவருக்கு என்றும் பதினாறு வயதாக இருக்கவென்றனுக்கிரகஞ் செய்ததலம் திருஞானபதிகம் 1 திருநாவுபதிகம் 3, சுந்தரபதிகம் 1, ஆக 5 (தென் இந்தியா ரெயில்வே மாயவரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 11 மைல்) அதற்குக் கிழக்கு ¼-கடிகையில்.

111 திருக்கடவூர் மயானம் சுவாமி பிரமபுரீயீஸ்வரர் அம்மன் மலர்க்குழன்மின்னம்மை பங்குனிமீ அசுபதி நக்ஷத்திரம் வரும்போது கூபத்தில் காசிகங்கை வருகின்றது. அப்பொழுது ஸ்நானவிசேஷம், அக்கங்கை காசிகங்கையையொத்த சோதனையுள்ளதாகவிருக்கும் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 3, சுந்தரபதிகம் 1, ஆக 5 (தென் இந்தியா ரெயில்வே மாயவரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 12 மைல்) அதற்குத் தென்கிழக்கு 5-கடிகையில்

112. திருவேட்டக்குடி சுவாமி திருமேனியழகர் அம்மன் சாந்தநாயகி தீர்த்தம் சந்திரபுஷ்கரணி திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பொறையார் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 4 மைல்) அதற்குத் தென்மேற்கு 4-கடிகையில்.

113. திருக்கெளிச்சேரி (என்பது கோயிற்பத்து) சுவாமி பாரவதீசுரர் அம்மன் சத்தியம்பாள் சத்திதீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பொறையார் ரோட் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு ½ மைல்) அதற்குத் தென்மேற்கு 2 கடிகையில்.

114. திருத்தருமபுரம் சுவாமி யாழ்மூரிநாதர் அம்மன் மதுரமின்னம்பிகை விஷ்ணுதீர்த்தம் பிரமதீர்த்தம் திருஞான யாழ்மூரிபதிகம 1, (தென் இந்தியா ரயில்வே திருநள்ளாறு ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 2½ மைல்) அதற்கு வடமேற்கு 1½-கடிகையில்.

115. திருநள்ளாறு சுவாமி தருப்பாரணியேசுரர் அம்மன் போகமார்த்த பூண்முலையம்மை இஃது சப்தவிடங்க ஸ்தலத்திலொன்று நகரவிடங்கர் உன்மத்தநடனம் நளதீர்த்தம நளசக்கிரவர்த்தி பூசித்து மனோரதமடைந்ததலம் மதுரையில் அக்கினியினின்றும் வேகாது, சமணரைவென்ற போகமார்த்த பூண்முலையாளென்னும், திருஞானசம்பந்த சுவாமிகளருளிச்செய்த பச்சைப்பதிகமுள்ளதலம் திருஞானபதிகம 4, திருநாவுக்கரசுபதிகம் 2, சுந்தரபதிகம் 1, ஆக 7. (தென் இந்தியா ரெயில்வே திருநள்ளாறு ஸ்டேஷனிலிருந்து தெற்கு ½ மைல்) அதற்கு வடமேற்கு 4-கடிகையில்.

116. திருக்கோட்டாறு சுவாமி ஐராவதேசுரர் அம்மன் வண்டமர்பூங்குழலி சூரியதீர்த்தம திருஞானபதிகம் 2, (தென் இந்தியா ரெயில்வே அம்பரத்தூர் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 1½ மைல்) அதற்கு தென்மேற்கு 4 கடிகையில்.

117. திருவம்பர் பெருந்திருக்கோயில் சுவாமி பிரமபுரீஸ்வரர் அம்மன் பூங்குழலம்மை தீர்த்தம் அன்னமாம் பொய்கை. கிலந்திச்சோழமகாராஜாவுக்கு மணக்கோலமாகக் காக்ஷிகொடுத்

ததலம். இஃது சோழராஜாவானவர் திருவானைக்காமுதலியபர பெருந்திருக்கோயில்களுக்கு 64-மாடக்கோயில் திருப்பணிசெய்வித் தார் மாடக்கோயில் (என்பது) கட்டுமலையும் யானைகள் செல்லக் கூடாதிருக்குஞ் சந்நிதிபுமுடையதாகக் கட்டப்படுவது. சோமாசிமாறநாயனார் முத்திஸ்தலம் திருஞானசம்பந்தர் பதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 2 மைல்) அதற்கு மேற்கு 1-கடிகையில்.

118. திருவம்பர் மாகாளம் (என்பது கோயிற்றிருமாளம்) சுவாமி காளகண்டேசுரர். அம்மன் பக்ஷநாயகியம்மை. தேவதீர்த்தம் சோமாசிமாற நாயனார் பிறந்து முத்தியடைந்ததலம் இப்போதாலயத்தில் இஃது நாயனார் யாகஞ்செய்த விடத்தில் தியாகேசனும் அம்மையும் தீர்த்த-திருமேனியுடன் சகடையுடன், மதுக்குடமுங் கொண்டுவந்தபடியே திருவுருக்கொண்டிருக்கின்றனர். திருஞானபதிகம் 3, (தென் இந்தியா ரெயில்வே பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து 1½ மைல்) அதற்குத் தென்மேற்கு 3-கடிகையில்.

119. திருமீயச்சூர் சுவாமி திருமுயற்சிநாதர் அம்மன் சௌந்தரியநாயகி தீர்த்தம் சங்காகூபம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பேரளம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) இஃது கோயில் வடக்குப் பிரகாரத்தில்.

120. திருவிளங்கோயில் சுவாமி சகலபுவனேஸ்வரர். அம்மன் மேகலாம்பிகை அமுததீர்த்தம் இது பேராளம் திருநாவுக்கரசு பதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பேரளம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்குத் தென்மேற்கு 1-கடிகையில்.

121. திருத்திலதைப்பதி (என்பது கோயிற்பத்து) மதிமுத்தம் சுவாமி முத்தீசுரர் அம்மன் பொற்கொடிநாயகி. தீர்த்தம்

சந்திரபுஷ்கரணி சந்திரன் பூசித்த தலம் காசிபட்டணத்தரசர் களிற் சித்தோசிமகாராஜா தர்ப்பணஞ்செய்த தலம். அவ்வாச முகூர்த்தமு மாலயத்திலிருக்கின்றது. திருஞான பதிகம் 1, (தென் இந்திய ரெயில்வே பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்கு வடமேற்கு 3-கடிகையில்.

122. திருப்பாம்புரம் சுவாமி பாம்பீசுவரர் அம்மன் வண்டார்பூங்குழலி திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பேரளம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்கு மேற்கு 1-கடிகையில்.

123. திருச்சுறுகுடி சுவாமி மங்களேசுவரர் அம்மன் மங்களநாயகியம்மை சூரியதீர்த்தம் திருஞான பதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே பேரளம் ஸ்டேஷனிலிருந்து தென் மேற்கு 1 மைல்) அதற்குத் தென்மேற்கு $1\frac{1}{2}$-கடிகையில்.

124. திருவீழிமிழலை சுவாமி வீழியழகீசுரர் அம்மன் சுந்தராம்பிகை விஷ்ணுதீர்த்தம் சிவபெருமான் கார்த்தியாயன மகரிஷியின் மகத்திற்றோன்றிய உமாதேவியாகிய பெண்ணைத் திருமணம்புரிந்து மணவாளக்கோலத்துடன் சதாவாயெழுந்தருளியிருக்கின்றார். இதனால் பார்வதியாருக்குக் கார்த்தியாயனியென்றொருநாமமுமிருக்கின்றது. விஷ்ணு நேத்திரார்ப்பணஞ்செய்து சக்கரம் பெற்றதலம் சம்பந்தசுவாமி ஆலயமும் அப்பர் சுவாமி ஆலயமும் வடக்கு வீதியிலிருக்கின்றன. ஷை சுவாமிகளிருவருக்குஞ் சிவபிரான் துர்பிக்ஷகாலம் நீங்கும்வரையில் பொற்காசு கொடுத்ததலம் விருக்ஷம் வீழிதிருஞானபதிகம் 15, திருநாவுபதிகம் 8 சுந்தரபதிகம் 1, ஆக 24. (தென் இந்தியா ரெயில்வே பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து தென் மேற்கு 5 மைல்) அதற்கு வடமேற்கு 1-கடிகையில்.

•125. திருவன்னியூர் சுவாமி அக்கினீசுவரர் அம்மன் பார்வதியம்மை. அக்கினி தீர்த்தம் திருநாவுபதிகம் 1, (தென் இந்தி

யா ரெயில்வே பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 6 மைல்) அதற்குத் தென்மேற்கு 2-கடிகையில்

126. திருக்கருவிலி சுவாமி சற்குணவீசுரர் அம்மன் சர்வாங்கநாயகி திருநாவுபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே ஆடுதுறை ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 4½ மைல் அதற்குத் தென்மேற்கு 3-கடிகையில்.

127. திருப்பேணுபெருந்துறை என்பது திருப்பந்துறை சுவாமி சிவாநந்தநாதேசுவரர் அம்மன் மலையரசிபம்மை சின்மயானந்த தீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 7 மைல்) அதற்கு மேற்கு 1¼-கடிகையில்.

128. திருநறையூர் சித்தீச்சுரர் சுவாமி சித்தநாதேசுவரர் அம்மன் அழகாம்பிகை பிரமதீர்த்தம் திருஞானபதிகம் 3, சுந்தரர்பதிகம் 1, ஆக 4. (தென் இந்தியா ரயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 6 மைல்) அதற்கு வடமேற்கு 1-கடிகையில்.

129. திருவரிசிற்கரைபுத்தூர் (என்பது அழகார்புத்தூர் சிறுவிலிபுத்தூர்) சுவாமி படிக்காசளித்தவீசுவரர் அம்மன் அழகாம்பிகை வாஞசுரதீர்த்தம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, சுந்தரப்பதிகம் 1, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 4 மைல்) அதற்கு வடமேற்கு 1-கடிகையில்.

130. திருச்சிவபுரம் சுவாமி பிரம்புரிநாயகேசுவரர் அம்மன் பெரியநாயகி சூரியதீர்த்தம் திருஞானபதிகம் 3, திருநாவுபதிகம் 1, ஆக 4 (தென் இந்தியா ரெயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 1½ மைல்) அதற்குத்தென்மேற்கு 1½-கடிகையில்.

131 திருக்கலய நல்லூர் என்பது சாக்கோட்டை சுவாமி அமுதகலசீசுவரர் அம்மன் அமுதவல்லி நால்வேததீர்த்தம் சுந்தரப்திகம் 1, (தென்இந்தியா ரெயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 2 மைல்). அதற்குத் தென்கிழக்கு $\frac{1}{2}$-கடிகையில்.

132. திருக்கருக்குடி (என்பது மருதாந்தநல்லூர்) சுவாமி சற்குணலிங்கேஸ்வரர் அம்மன் சர்வாலங்காரமின்னம்மை எமதீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 3 மைல்) அதற்குத் தென்கிழக்கு 10-கடிகையில்.

133. திருவாஞ்சியம் சுவாமி வாஞ்சிலிங்கேஸ்வரர் அம்மன் மங்களநாயகி கூபதீர்த்தம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 3 (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்குக் கிழக்கு 3-கடிகையில்.

134. திருநன்னிலத்துப் பெருங்கோயில் சுவாமி பிரகாசநாதர், அம்மன்பிரகாசநாயகி சுந்தரபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 2 மைல்) அதற்கு கிழக்கு $\frac{3}{4}$-கடிகையில்.

135. திருக்கொண்டீச்சரம், சுவாமி பசுபதீசுரர், அம்மன் சாந்தநாயகி திருநாவுபதிகம் 2, (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்குத் தென்கிழக்கு $1\frac{1}{2}$-கடிகையில்.

136. திருப்பனையூர், சுவாமி சௌந்தரியநாதர், அம்மன் பெரியநாயகி அமுததீர்த்தம். திருஞானபதிகம் 1, சுந்தரப்திகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 2 மைல்) அதற்குத்தெற்கு $1\frac{1}{4}$-கடிகையில்.

137. திருவிற்குடி சுவாமி வீரட்டானேசுவரர் அம்மன் மைவார்குழலி இஃது அட்டவீரட்டத்திலொன்று சலந்தராசுரனை சம்மாரஞ்செய்ததலம் சந்திரசேகராலயத்திற் சங்கரமிருக்கின்றது திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே வெட்டாறு ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 32 மைல்) அதற்கு வடகிழக்கு 3-கடிகையில்.

138. திருப்புகலூர் சுவாமி கோணற்பிரானாகிய அக்கினீசுவரர் அம்மன் கருந்தார்குழலி அப்பர்சுவாமிகள் சித்திரை மாதம் சதையத்திற் சிவபெருமானைச் சிங்கமே உன்னடிக்கே யோதுகின்றேன் என்று திருத்தாண்டகத்திற்பாடி மகாலிங்கத்திலயிக்கமான தலம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் செங்கல்லைப் பொன்னாக்கிக் கொடுத்ததலம் முருகநாயனார் திருவவதாரம் திருத்தொண்டு திருமாலைதொடுத்தல் அக்கினி தீர்த்தம் திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம் 5, சுந்தரபதிகம் 1, ஆக 8. (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 4 மைல்) மேற்படி ஆலயவடபுறம்.

139. திருவர்த்தமானீச்சுரம் சுவாமி வர்த்தமானீச்சுரர் அம்மன் ஷை கருந்தார்குழலி அக்கினிதீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 4 மைல்) அதற்குத்தெற்கு 1-கடிகையில்.

140. திருவிராமநந்தீச்சுரம், சுவாமி இராமலிங்கேசுரர் அம்மன் கருவார்குழலி மணிகங்கைதீர்த்தம் திருஞானபதிகம் 1 (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 5 மைல்) அதற்குத் தெற்கு $1\frac{3}{4}$-கடிகையில்.

141. திருப்பயற்றூர் சுவாமி திருப்பயற்றீசுரர் அம்மன் காவியங்கண்ணி திருநாவுபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே வெட்டாறு ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 6 மைல்) அதற்கு வடகிழக்கு 3-கடிகையில்.

142. திருச்செங்காட்டங்குடி (என்பது கணபதீச்சுரம்) சுவாமி கணபதீசுரர், அம்மன் திருககுழல்நாயகி. கணபதி பூசித்ததலம். சிவபெருமான் உச்சகையைல் 6-ல் ஒன்றாகிய மதத்தைத் தழுவி வயிரவ வேடங்கொண்டு சிறுத்தொண்டநாயனாரது பிள்ளையைக் கறியமுது பண்ணச்செய்து அப்பிள்ளையை எழுப்பி நாயனாருக்கு இடபவாகனரூடராயெழுந்தருளிக் காட்சி கொடுத்தலம். அந்நகரத்திற்கு உருத்திராபதி யென்றொரு நாமமுண்டு. சத்திதீர்த்தம் திருசாத்தி விருட்சம், திருஞானபதிகம 2, திருநாவுக்கரசு பதிகம 1, ஆக 3 (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 7 மைல்) அதற்கு வடகிழக்கு 1-கடிகையில்.

143. திருமருகல் சுவாமி மாணிக்கவண்ணேசுரர் அம்மன் வண்டுவார்குழலி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஒரு செட்டிபிள்ளைக்கு விடந்தீர்த்ததலம் விடந்தீர்த்தபிள்ளையார சிவகங்கைதீர்த்தம் வன்னிவிருட்சம், திருஞானபதிகம் 2, திருநாவுக்கரசு பதிகம் 1, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 7 மைல்) அதற்கு வடகிழக்கு 1-கடிகையில்.

144. திருச்சாத்தமங்கை (என்பது கோயிற்றிருச்சாத்தமங்கை) சுவாமி மாந்தீசுரர் அம்மன் வையலாம்பிகை பிரமதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே நன்னிலம ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 8 மைல்) அதற்கு தென்கிழக்கு $1\frac{1}{2}$-கடிகையில்.

145. திருநாகைக்காரோணம் (என்பது நாகப்பட்டணம்) சுவாமி ஆதிபுராணேசுரர் அம்மன் நீலாயதாட்சி சுந்தரவிடங்கத்தியாகர் இஃது சப்தவிடங்கத்தலத்திலொன்று அலைபோல் நடனம் சாலீசுக மகாராஜாவானவர் தேவேந்திரனுக்கு இடையூறியற்றிய சம்பாசூரன் முதலிய அசுரர்களை வதஞ்செய்து

அத்தேவராஜனிடத்திலிருந்து அச்சுந்தரவிடங்கரைச் சிவபெருமான்றிருவருளாற் பெற்றுவந்து பிரதிட்டை செய்தது காசியிலிருந்து புண்டரீக மகாரிஷியானவர் காமகோடிபீடமாகிய காஞ்சீபுரத்திலும், கும்பகோணத்திலும் மூன்றுகாரோணப்பிரதிட்டை செய்து பூசையாற்றி (94000) வருஷஞ்சென்ற தானினைத்தது முடிவுறாது மயங்குங்காலையில் கண்ணுவமுனிவர் தோன்றி அருள்செய்தபிரகாரம வந்து தேவதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மேலக்காரோணம் பிரதிட்டைசெய்து பூசித்து ஆதிபுராணேசுரரைத் தரிசித்து வருங்காலையில் இரண்டு தடவையில் காட்சிகொடுத்து மூன்றாந்தடவையில் அவ்வாதிபுராணலிங்கத்தில் காயத்துடன் அந்த மகாரிஷியை ஆரோகணஞ்செய்துகொண்டார். அதுமுதல் ஆதிபுராணேசுரர்க்கு காயாரோகணேசுரரென்ற திருநாமமுமுடையது ; தீர்த்தங்கள் தேவதீர்த்தம், சர்வதீர்த்தம் என்பது புண்டரீகதீர்த்தம், அக்கினி தீர்த்தமாகிய காக தீர்த்தம், பிரமதீர்த்தம், முனிதீர்த்தம, வச்சிரதீர்த்தம் முதலிய தீர்த்தங்களுமுண்டு நாகராஜாமுதலிய அனேகர் பூசித்தத்தலம மாவிருட்சம் அதிபத்தநாயனார் முத்தியுற்றதலம் திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம 4, சுந்தரபதிகம 1, ஆக 7. (தென் இந்தியா ரெயில்வே நாகபபட்டணம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு $\frac{3}{4}$ மைல்) அதற்குமேற்கு $1\frac{1}{2}$-கடிகையில்.

146. திருச்சிக்கல் சுவாமி வெண்ணெலிங்கேசுரர் அம்மன் வேல்நெடுங்கண்ணி தீர்த்தம் பாற்குளம் விருக்ஷம் குடைசங்மல்லிகை வசிஷ்டர் காமதேனு முதலிய பூசித்த தலம் சிங்காரவேலவர் சூரனைவிரட்டிவந்து சம்மாரஞ் செய்தவிடமென்றுஞ்சொல்லுவார்கள். இப்போதும் கந்தசஷ்டி உற்சவம் வெகு மேம்பாட்டுடன் நடக்கின்றது. திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே சிக்கல் ஸ்டேஷனிலிருந்து வடக்கு $\frac{1}{2}$ மைல்) அதற்கு மேற்கு $3\frac{1}{2}$-கடிகையில்.

147. திருக்கீழ்வேளூர் சுவாமி அக்ஷயலிங்கேஸ்வரர் அம்மன் வனமுலைநாயகி அகஸ்தியமகாரிஷிக்கு வலது திருவடிதரிசனம் காட்டிய சபாபதிமுகூர்த்தம் சிவஞானதீர்த்தம் இலந்தை விருக்ஷம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1. ஆக 2 (தென் இந்தியா ரெயில்வே கீவளூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 1 மைல்) அதற்கு தெற்கு 2-கடிகையில்.

148. திருத்தேவூர் சுவாமி தேவபுரீசர் அம்மன் மதுராபாஷணி தேவதீர்த்தம் விருக்ஷம் வாழை திருஞானபதிகம் 2. (தென் இந்தியா ரெயில்வே கீவளூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 3 மைல்) அதற்கு வடமேற்கு 6-கடிகையில்.

149. திருப்பள்ளியின் முக்கூடல் சுவாமி முக்கோணேசுரர் அம்மன் மைமேவுகண்ணி திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே வெட்டாறு ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 1 மைல்) அதற்கு தென்மேற்கு 2-கடிகையில்.

150. திருவாரூறரநெறி சுவாமி அகிலேசுரர் அம்மன்புவனேஸ்வரி திருநாவுபதிகம் 2. (தென் இந்தியா ரெயில்வே திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 1 மைல்) அவ்வாலய வடமேற்கில்.

151. திருவாரூர், மூலட்டானம் சுவாமி வன்மீகத்தியாகேசுரர் அம்மன் அல்லியங்கோதை மனுவுக் கனுக்கிரகம் பண்ணினவர் இலக்குமி பூசித்து மங்கிலியம்பெற்ற தலம் சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு திருத்தொண்டர் தொகை பாடும்பொருட்டு "தில்லைவாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று முதல் மொழியெடுத்துக் கொடுத்தும் பரவைநாச்சியாருடதீரப் பாதியிரவிற் றூதுசென்றும் ஆட்கொண்டதலம் சபதவிடங்கத் தலத்திலொன்று வீதிவிடங்கர் அசபாநடனம் இந்து முசுகுந்தச் சக்கிரவர்த்தி பிரதிட்டை கமலாலயதீர்த்தம்

சங்குதீர்த்தம் பாதிரிவிருக்ஷம் திருஞானபதிகம் 5, திருநாவுபதிகம் 21, சுந்தரப்பதிகம் 8, ஆக 34. (தென் இந்தியா ரெயில்வே திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து 1 மைல்) மேற்படி ஆலயத்தின் மகாராதநிலைக்குச் சமீபமாகத் தென்மேற்கு.

152. பரவையுண்மண்டளி (என்பது தூவாநாயனார் கோயில்) சுவாமி பரவையுண்மண்டலேஸ்வரர் அம்மன் பஞ்சின் மெல்லடியாள் சுந்திரமூர்த்தி சுவாமிகளுக்குக் கண்கொடுத்த தலம், சுந்தரப்பதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து கீழ்வீதியில் ¼ மைல்) அதற்கு தென்மேற்கு 1½-கடிகையில்.

153. திருவிளமா சுவாமி பதஞ்சலி மனோகரவீசுரர் அம்மன் யாழின்மொழியம்மை அக்கினி தீர்த்தம் இதிற் பதஞ்சலி வியாக்கிரமபாதர் இருக்கின்றார்கள் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1½ மைல்) அதற்கு வடமேற்கு 3-கடிகையில்.

154. திருக்கரைவீரம் (என்பது கரையபுரம்) சுவாமி கரைவீரேஸ்வரர் அம்மன் பிரதியக்ஷமின்னம்பிகை பிரமதீர்த்தம் திருஞானபதிகம 1. (தென் இந்தியா ரெயில்வே குளிக்கரை ஸ்டேஷனிலிருந்து வடமேத்கு 4½ மைல்) அதற்கு வடமேற்கு ¾-கடிகையில்.

155. திருப்பெருவேளூர் (என்பது காட்டூரையன்பேட்டை) சுவாமி பிரியாஈஸ்வரர் அம்மன் மின்னனையாள் மூசிகதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே குளிக்கரை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 6 மைல்) அதறகு மேற்கு 2¼-கடிகையில்.

156. திருத்தலைபாலங்காடு (என்பது தலைச்சங்காடு) சுவாமி ஆடமல்லாசுவரர் அம்மன் திருமடந்தை சங்கரதீர்த்தம்

திருநாவுபதிகம் 1. (தென்இந்தியா ரெயில்வே குளிக்கரை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 8 மைல்) அதற்கு மேற்கு 3½-கடிகையில்.

157. திருக்குடவாயில் சுவாமி கோணேஸ்வரர் அம்மன் பெரியநாயகி அமுததீர்த்தம் திருஞானபதிகம் 2. (தென் இந்தியா ரெயில்வே கொரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடக்கு 8 மைல்) அதற்கு வடமேற்கு 1-கடிகையில்.

158. திருச்சேறை (என்பது உடையார்கோவில்) சுவாமி சென்னறியபபார் அம்மன் ஞானவல்லி மார்கண்டதீர்த்தம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 2, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே கொரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 9-மைல்) அதற்குத் தென்கிழக்கு 1-கடிகையில்.

159. திருநாலூர்மயானம் (என்பது நாத்தூர்) சுவாமி பல்லவனீஸ்வரர் அம்மன் பெரியாம்பிகை சந்திரதீர்த்தம் நாலூர் மேவுமயானம் வேறு இரண்டுக்கும் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே கொரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடக்கு 10 மைல்) அதற்குத் தென்மேற்கு 3-கடிகையில்.

160. திருக்கடுவாய்க் கரைபுத்தூர் சுவாமி சொர்ணபுரியீஸ்வரர் அம்மன் சிவாம்பிகை திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரயில்வே கொரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 11 மைல்) அதற்கு தெற்கு 2-கடிகையில்.

161. திருவிரும்பூளை (என்பது ஆலங்குடி) சுவாமி காசிபாரண்ணியவீசுரர் அம்மன் ஏலவார்குழலி தெக்ஷணாமூர்த்தம் தீர்த்தம் அமுதபொய்கை திருஞானபதிகம் 1. (தென்இந்தியா ரெயில்வே நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 7 மைல்) அதற்கு மேற்கு 3-கடிகையில்.

162. திருவரதப்பெரும்பாளி (என்பது அரித்துவாமங்கலம்) திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே சாலியமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 7 மைல்) அதற்கு மேற்கு 1-கடிகையில்.

163. திருவவளிவணல்லூர் சுவாமி சாக்ஷிநாயகேசுரர் அம்மன் சவுந்தரநாயகி குருக்கள்பெண்ணுக்குச் சாட்சிசொன்ன இடபாரூடமுகூர்தத்த மிருக்கின்றது தீர்த்தம் சந்திரபுஷ்கரணி திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே சாலியமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 6 மைல்) அதற்குத்தென் மேற்கு 7½-கடிகையில்.

164. திருப்பருதிநியமம் (என்பது பருத்தியப்பார்கோயில்) சுவாமி பருததியபபவீசுரர் அம்மன் மங்களநாயகி சூரியன் பூசித்ததலம் சூரியதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரயில்வே தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 8 மைல்) அதற்கு வடகிழக்கு 8-கடிகையில்.

165. திருவெண்ணி (என்பது கோவில்வெண்ணி சுவாமி வெண்ணிநாயகஈசுரர் அம்மன் அழகியநாயகிபம்மை திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 2, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே அம்மாபேட்டை ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 3½ மைல்) அதற்குத் தென்கிழக்கு 3-கடிகையில்.

166. திருப்பூவனூர் சுவாமி புஷ்பவனயீசுரர் அம்மன் கற்பவல்லி கருங்குழி தீர்த்தம் திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரயில்வே நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு மைல்) அதற்குத் தென்கிழக்கு 4-கடிகையில்.

167. திருப்பாதாளேச்சுரம் (என்பது பாம்பணி) சுவாமி சர்ப்புர ஈசுவரர் அம்மன் அமுதநாயகி நாகதீர்த்தம் இஃது மன்னார்கோவிலுக்கு வடக்கு 1½-கடிகையிலிருக்கின்றது இத்தலத்

கினது பெயரினுற்ருன் அவ்வாற்றுக்கும் பாம்பணியென்று பெயரிருக்கிறதாக ஸ்ரீகம திருஞானபதிகம் 1 (தென் இந்தியா ரெயில்வே நீடமங்கலம் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 12 மைல்) அதற்குத் தென்கிழக்கு 10-கடிகையில்

168. திருக்களா சுவாமி களாமூலேசுவரர் அம்மன் அழகேஸ்வரி துருவாசமகாரிஷிக்கு நடனதரிசனம் கொடுத்த நடேசமுகூர்த்தமும் அவ்விருடி முகூர்த்தமும் அவ்வாலயத்தி லிருக்கின்றன துருவாசதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருத்துறைப்பூண்டி ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 11 மைல்) அதற்குத் தென்கிழக்கு 2 கடிகையில்.

169. திருச்சிற்றேமம் (என்பது எழிலூர் சேமம்) சுவாமி பொன்வைத்தநாயகர் அம்மன் அகிலாண்டவல்லி சொர்ணதீர்த தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநெல் லிக்காவல் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 11 மைல்) அதற்குத் தென்மேற்கு 10-கடிகையில.

170. திருவுசாத்தானம் (என்பது திருக்கோயிலூர்) சுவா மிமந்தரபுரீஸ்வரர் அம்மன் பெரியநாயகி யம்மை நின்மலதீர்த்தம் இஃது முத்துப்பேட்டைக்கு வடக்கு 1½-கடிகையிலிருக்கின் றது திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே முத்துப் பேட்டை ஸ்டேஷனிலிருந்து வடக்கு 1 மைல்) அதற்குத்தென் கிழக்கு 7½-கடிகையில்.

171. திருவிடும்பாவனம் சுவாமி சற்குணநாயக ஈஸ்வரர் அம்மன் மங்களநாயகியம்மை குசுமதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியாரெயில்வே பாண்டி ஸ்டேஷனிலிருந்து தெற்கு 4 மைல்) அதற்குக்கிழக்கு ½-கடிகையில்.

172. திருக்கடிக்குளம் (என்பது கற்பகனார்கோவில் சுவாமி கற்பகேஸ்வரர் அம்மன் சௌந்தரநாயகி திருஞானபதி

கம் 1. (தென் இந்தியா ரெயில்வே பாண்டி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 4 மைல்) அதற்கு வடகிழக்கு 10-கடிகையில்.

173. திருக்தண்டலை நீணெறி. சுவாமி நீணெறிநாதா அம்மன் ஞானம்பிகை, ஜயதீர்த்தம். இத்தலத்துக்கு ½ கடிகையிலிருக்குங் கணமங்கலத்தில் பிறந்து அறிவாட்டாயனாயனா சிவபெருமானுக்குச் செந்நெல்லரிசி மாவடுசெங்கீரை முதலான பலவகை நிவேதித்துப் பணிவிடைசெய்து முத்தியடைந்ததலம் இப்போதவ்விடம் கமராயிருக்கின்றது இத்தலத்தில் மாவடுநிவேதனம் முக்கிய விசேஷம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருத்துறைபூண்டி ஸ்டேஷனிலிருந்து வடக்கு 2 மைல்) அதற்கு மேற்கு 5-கடிகையில்.

174. திருக்கோட்டூர் சுவாமி கொழுந்தீஸ்வரர் அம்மன் மதுரவசனாம்பிகை அமுததீர்த்தம் திருஞானபதிகம 1. (தென் இந்தியா ரெயில்வே திருத்துறைபூண்டி ஸ்டேஷனிலிருந்து வடக்க 2 மைல்) அதற்கு மேற்கு 7½-கடிகையில்.

175. திருவெண்டுறை சுவாமி வெண்டுறைநாதேஸ்வரா அம்மன் வேனெடுகண்ணி அகத்தியதீர்த்தம், திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே பொன்னிறை ஸ்டேஷனிலிருந்து மேற்கு 8½ மைல்) அதற்கு வடகிழக்கு ¼-கடிகையில்.

176. திருக்கொள்ளமபூதூர் (என்பது செல்லூர் திருக்களப்பூர் சுவாமி வில்வவனேஸ்வரர் அம்மன் சௌந்தராம்பிகை பிரமதீர்த்தம் வில்வவிருக்ஷம் ஐப்பசிமீ அமாவாசையில் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு நம்பனென்கிற சுவாமி ஓடம் விட்டு வெட்டாறுகரையேற்றி இடபாரூடராய்க் காக்ஷிகொடுத்ததலம் திருஞானபதிகம் 1 (தென் இந்தியா ரெயில்வே கொரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 5 மைல்) அதற்குத் தென்கிழக்கு 10-கடிகையில்.

177. திருப்பேரை (என்பது தென்திருப்பேரை) சுவாமி சகதீசுரர் அம்மன் பொன்னமிர்தநாயகி அக்கினி தீர்த்தம் திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 3 மைல்) அதற்குத்தெற்கு 3-கடிகையில்.

178. திருக்கொள்ளிக்காடு சுவாமி தீவண்ணநாதர் அம்மன் பஞ்சின்மெல்லடிநாயகி திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரயில்வே பொன்னிரை ஸ்டேஷனிலிருந்து மேற்கு $3\frac{1}{2}$ மைல்) அதற்குக் கிழக்கு $\frac{1}{4}$-கடிகையில்.

179. திருத்தெங்கூர் சுவாமி வெள்ளிமலையப்பார் அம்மன் பெரியாம்பிகை சிவகங்கை தீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநெல்லிக்காவல் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 1 மைல்) அதற்கு வடகிழக்கு $\frac{1}{4}$-கடிகையில்.

180. திருநெல்லிக்கா சுவாமி நெல்லிவனேஸ்வரர் அம்மன் மங்களேஸ்வரி பிரமதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநெல்லிக்காவல் ஸ்டேஷனிலிருந்து மேற்கு $\frac{1}{2}$ மைல்) அதற்கு வடக்கு 3 கடிகையில்.

181. திருநாட்டியத்தான்குடி சுவாமி கரிநாதேஸ்வரர் அம்மன் மலர்மங்கைநாயகி சூரியதீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு $\frac{3}{4}$ மைல்) அதற்குத தென்கிழக்கு 4-கடிகையில்.

182. திருக்காறுயில் (என்பது திருக்காறைவாசல்) சுவாமி கண்ணாயிரநாதர் அம்மன் கைலாயநாயகி; இஃது சப்தவிடங்கத் தலத்திலொன்று ஆதிவிடங்கர்க்கு குடநடனம் பிரமதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 4 மைல்) அதற்கு கிழக்கு 2-கடிகையில்.

183. திருக்கன்றாப்பூர் சுவாமி நடுதறியப்பார் அம்மன் மாதுநாயகி ஒரு பிராமணப்பெண்ணுக்காக நடுதறியிற் சுவாமி உற்பத்தியான தலம் ஞானதீர்த்தம் திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 3 மைல்) அதற்குத் தென்மேற்கு 1½-கடிகையில்.

184. திருவலிவலம் சுவாமி மனத்துணைநாதர் அம்மன் வாளையங்கண்ணி சக்கரதீர்த்தம் திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 4. (தென் இந்தியா ரெயில்வே திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 3 மைல்) அதற்குத் தென்மேற்கு 2-கடிகையில்.

185. திருக்கச்சினம் சுவாமி கச்சிநாயகேஸ்பரர் அம்மன் வெள்வளைநாயகி இந்திர தீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருநெல்லிக்காவல் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 2 மைல்) அதற்குக் கிழக்கு 2-கடிகையில்.

186. திருக்கோளிலி (என்பது திருக்குவளை) சுவாமி கோளிலிநாதர் அம்மன் வண்டமர்பூங்குழலி இஃது சத்த விடங்கத்தலத்திலொன்று அவனிவிடங்கத்தியாகர் வண்டு நடனம் பிரமதீர்த்தம் பரவை நாச்சியாருக்காகக் குன்றையூர்க்கிழாரிடத்தில் வாங்கிய நெற்களைச் சுந்தரமூர்த்திசுவாமிகள் கேட்டுக்கொண்டபடி சிவபெருமான் பூதங்களைக்கொண்டு திருவாரூரிற் சேர்ப்பித்த தலம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 2, சுந்தரபதிகம் 1, ஆக 4. (தென் இந்தியா ரெயில்வே திருநெல்லிக்காவல் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 7 மைல்) அதற்குத் தென்கிழக்கு 2½-கடிகையில்.

187. திருத்தென்திருவாய்மூர் சுவாமி வாய்மூரடிகளீசுரர் அம்மன் பாலினும் நன்மொழிநாயகி இஃது சப்த விடங்கத்தலத்திலொன்று நீலவிடங்கர் கமலநடனம் திருஞானசம்பந்தசுவாமி.

ன் பாடியருள திருநாவுக்கரசு சுவாமிகளுக்குச் சிவபெருமான் தரிசனங்கொடுத்த தலம் சூரியதீர்த்தம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 2, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே திருநெல்விக் காவல் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 5 மைல்) அதற்குத் தென்கிழக்கு $7\frac{3}{4}$ கடிகையில்.

188. திருமறைக்காடு (என்பது வேதாரணியம்) சுவாமி மறைக்காட்டீசுரர் அம்மன் யாழைப்பழித்த மொழியாள் இஃது சப்தவிடங்கத் தலத்திலொன்று புவனிவிடங்கர் அமிர்தநடனம் வேதம் பூசித்ததலம் மறைபாற்றிருக்காப்பு செய்த கதவைத் திருநாவுக்கரசு சுவாமிகளுந் திருஞானசம்பந்த சுவாமிகள் திறக்கவு மடைக்கவு மபாடிய தலம். தீர்த்தம் மணிகர்ணிகை வேதநதி விருக்ஷம் வன்னி திருஞானபதிகம் 4, திருநாவுபதிகம் 5, சுந்தரபதிகம் 1, இன்னமொருபதிகம் மதிக்கப்படவில்லை ஆக 10. (தென் இந்தியா ரெயில்வே அகஸ்தியாமபள்ளி ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 4 மைல்) அதற்குத்தெற்கு 1-கடிகையில்.

189. திரு அகத்தியாம்பள்ளி சுவாமி அகத்தீஸ்வரர் அம்மன் மங்கைநாயகி எனவும் பாகம் பிரியாளென்றும் பெயர் அகத்தியர் பூசித்ததலம் அக்கினிதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே அகத்தியான்பள்ளி ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 4 மைல்) அதற்குத் தெற்கு 5-கடிகையில்.

190. திருக்கோடிக்குளகர் (என்பது குழவர்கோயில்) சுவாமி அமிர்தகடேசுரர் அம்மன் மையார்தடங்கண்ணி அமுத தீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே கோடிக்கரை ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 2 மைல்) ஆக சோழவள நாட்டுத் திருச்சிவதலம் 190-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## ஈழநாடு.

### இது இரண்டேட் இலங்கைத்தீவில் இருக்கிறது.

191. திருக்கோணமாமலை சுவாமி கோணேஸ்வரர் அம்மன் மாதுமையாள். இது கைலாயத்தினது கொடுமுடிகளிலொன்று திருஞானபதிகம் 1. அதற்குத் தென்கிழக்கு.

192. திருக்கேதீச்சுரம் சுவாமி கேதீஸ்வரர் அம்மன் கௌரியம்பிகை கௌரிதீர்த்தம் திருஞானபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 2. ஆக ஈழநாட்டுத்திருச்சிவஸ்தலம் 2-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## பாண்டியநாடு.

193. திருவாலவாய் (என்பது மதுரை) சுவாமி சொக்கநாதீசுரர் அம்மன் மீனாட்சியம்மை இது மதுராமாநகர் சமட்டிவிச்சாபுரம் நான்மாடக்கூடல் திருவாலவாய் கடம்பவனம், துவாதசாந்தஸ்தலம், எனப்பல நாமங்களுடைய தலம். கற்பூரசுந்தரர், கலியாணசுந்தரர், மீனாட்சிசுந்தரர், சண்பகச்சுந்தரர், கடம்பவனச்சுந்தரர், பழிக்கஞ்சியசுந்தரர், ஆலவாய்ச்சுந்தரர், சோமசுந்தரர் எனப்பல பெயருமச் சொக்கலிங்கமூர்த்திக்கேயுண்டு அம்மூர்த்தி அத்தலம்புரக்கும் பாண்டியர்களை வழியடிமைகொண்டதுமன்றிக் கைலாயத்திருந்து பிரமதகணங்களுடன் வந்து இராஜராஜேஸ்வரியாகிய தடாதகைப் பிராட்டியாரைத் திருமணஞ்செய்து அச்செங்கோலைக் கையிற்றாங்கிச் சோமசுந்தரபாண்டியனெனத் திருப்பெயர்பூண்டு அரசுசெய்தும் வெள்ளியம்பலத்தாடியும் எழுகடலழைத்தும் எல்லாம் வல்லச் சித்தராய் வந்து கல்லானைக்குக் கரும்பூட்டியும் மாணிக்கம் விற்று வளையல் விற்றும் வரகுண பாண்டியனுக்குச் சிவலோகங் காட்

டியும் கான்மாறி நடித்தும் வேதத்திற்குப் பொருளுரைத்தும் பிட்டுக்கு மண்சுமந்து பாண்டியன் கைப்பிரம்படிபட்டும் நரியைப்பரியாக்கியும் பரியைநரியாக்கியும் இவ்வாறாக அறுபத்து நான்கு திருவிளையாடலாடியருளிய தலம். நெடுமாற நாயனார் குலச்சிறை-நாயனார் மங்கையர்க்கரசியார் சிவபிரானை வழிபட்டுச் சைவபயிரை வளர்த்த தலம் திருஞானசம்பந்தப் பிள்ளையார் சமணர்களைக் கழுவேற்றிய தலம். தீர்த்தம் பொற்றாமரை ஏழுகடல்வைகை முதலியன கடம்ப விருட்சம் திருஞானபதிகம 9, திருநாவுபதிகம் 2. ஆக 11 (தென் இந்தியா ரெயில்வே மதுரை ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 1 மைல்) அதற்கு வடக்கு 1-கடிகையில்.

194. திருவாப்பனூர் (என்பது திருவாப்புடையார்கோயில்) சுவாமி ஆப்பனூர்ப்பேசுரர் அம்மன் அம்பிகையம்மை இராசாவின் மந்திரிக்காக ஆப்புசிவலிங்கமான தலம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே மதுரை ஸ்டேஷனிலிருந்து வடக்கு 1 மைல்) அதற்கு தென்மேற்கு 4-கடிகையில்.

195. திருப்பரங்குன்றம் சுவாமி பரங்கிரிநாயகேசுவரர் அம்மன் ஆவிடைநாயகி சுப்பிரமணியர் தெய்வானையை மணஞ்செய்ததலம் தீர்த்தம் சரவணப்பொய்கை திருஞானபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே திருப்பரங்குன்றம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு ½ மைல்) அதற்கு வடமேற்கு 8-கடிகையில்.

196. திருவேடகம் சுவாமி எடகநாதேசுரர் அம்மன் மாதேவியம்பாள் வேகவதி தீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சமணருடன் வாதில் வைகையில் விட்ட எடெதிரேறிய திருப்பாசுரம் வெளிபபட்டதலம் திருஞானபதிகம் 1 (தென் இந்தியா ரயில்வே சோழவந்தான் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 2 மைல்) அதற்கு வடகிழக்கு 30-கடிகையில்.

197. திருக்கொடுங்குன்றம் (என்பது பிரான்மலை) சுவாமி கொடுங்குன்றீசுவரர் அம்மன் குயிலமுதநாயகி மங்கைநாயகர் மணவாளக்கோலம் சுந்தரதீர்த்தம் பௌர்ணமிக்கானிற்கும் விருக்ஷம் கார்த்திகைமீ கார்த்திகை நட்சத்திரத்தில் பருவத வுச்சியில் தீபதரிசனம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியாரெயில்வே அம்மயநாயக்கனூர் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 16 மைல்) அதற்குத் தென்கிழக்கு 15-கடிகையில்.

198. திருப்புத்தூர் சுவாமி புத்தீசுவரர் அம்மன் சிவகாமியம்மை கருடதீர்த்தம் சீதளிதீர்த்தம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே அம்மயநாயக்கனூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 25 மைல்) அதற்குத் தென்கிழக்கு 32-கடிகையில்.

199. திருப்பனவாயல் சுவாமி பழம்பதிநாதேசுரர் அம்மன் கருணைநாயகி தீர்த்தம் கருணாநதி திருஞானபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 2 (தென் இந்தியா ரெயில்வே அம்மயநாயக்கனூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 80 மைல்) அதற்குத் தென்கிழக்கு 44-கடிகையில்.

200. திருவிராமேச்சுரம் (என்பது இராமேஸ்வரம்) சுவாமி இராமலிங்கசுவரர் பருவதவர்த்தனியம்மை தீர்த்தங்கள் தனுகோடி முதலிய அறுபத்துநான்குள்ளவை இராமசுவாமி இராவணன் முதலிய ஆசுரேயரியரைக்கொன்ற பிரமஹத்தி நீங்க இராமலிங்கப்பிரதிஷ்டை பண்ணி சிவபிரானது திருவருட்பெற்ற தலம் ஆகையால் தலத்திற்கும் சிவபெருமானுக்கும் அப்பெயரெய்திற்று திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம் 1, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே இராமேஸ்வரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 1 மைல்) அதற்கு வடமேற்கு 45-கடிகையில்.

201. திருவாடானை சுவாமி ஆடானைநாதர் அம்மன் அம்பாயிரவல்லி ஆடுபூசித்த தலம் திருஞானபதிகம் 1. (தென் இந்

தியா ரெயில்வே அம்மையநாயக்கனூர் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கு 75 மைல்) அதற்கு மேற்கு 20-கடிகையில்.

202. திருக்கானப்பேர் (என்பது காளையார் கோவில்) சுவாமி காளையீசுரர் அம்மன் மகாமாயி பொன்விம்பமிராசா வானதீர்த்தம் புட்பவன தீர்த்தம் யானைமடுவென்னுந் தீர்த்தம் திருஞானபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே அம்மையநாயக்கனூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 54 மைல்) அதற்கு மேற்கு 10-கடிகையில்.

203. திருப்பூவணம் சுவாமி பூவண்ணநாதேசுரர் அம்மன் பின்னைபிகை தீர்த்தம் வைகை சொக்கலிங்கமூர்த்தி பொன்னனையாளென்னுந்தாசிக்கு ரசவாதஞ்செய்து கொடுத்த அப்பொன்னாலாய திருவுருவைக்கண்ட பொன்னனையாள், அச்சோவழகென்று வலது கபோலத்தைக்கிள்ளி முத்தமிட்டாள் அக்கிள் இன்னமுமிருக்கின்றதனாலும்முகூர்த்தத்துக்கு அச்சோ அழகென்று திருநாமமுண்டு .திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 4. (தென் இந்தியா ரெயில்வே திருப்பூவனம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு ½ மைல்) அதற்குத் தென்மேற்கு 15-கடிகையில்.

204. திருச்சுழியல் சுவாமி திருமேனிநாதேஸ்வரர் அம்மன் துணைமாலையம்பிகை பிரளயதீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருப்பூவனம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 12 மைல்) அதற்குத் தென்மேற்கு 100-கடிகையில்.

205. திருக்குற்றாலம் சுவாமி குறும்பலாவீசுரர் அம்மன் குழல்வாய்மொழியாள் சித்திராநதி தீர்த்தம் சிவசொரூபமாகிய குறும்பலாவுஞ் சித்திர சபையையுமுடைய தலம். அகஸ்தியமகாமுனி கைலாயத்திலிருந்து பொதியாசலத்துக் கெழுந்தருளின்போது விஷ்ணுமூர்த்தத்தைச் சிவலிங்கமாக்கியதலம்.

திருஞானபதிகம் 2. (தென் இந்தியா ரயில்வே தென்காசி ஸ்டேஷனிலிருந்து மேற்கு 3½ மைல்) அதற்குத் தென்கிழக்கு 25 கடிகையில்.

206. திருநெல்வேலி சுவாமி வேணுவனேஸ்வரா சாலிவாடீஸ்வரர் நெல்லுக்கு வேலிகட்டு நெல்லையப்பர் அநவரதநாதர் அம்மன் காந்திமதி தாம்பிரசபை தீர்த்தம் தாம்பிர வன்னி பொற்றாமரை கம்பாநதி முதலியன திருஞானபதிகம் 1. (தென் இந்தியாரெயில்வே திருநெல்வேலி டவுன் ஸ்டேஷனிலிருந்து தெற்கு ½ மைல்) ஆக பாண்டியநாடு 14-ம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

௮

## சேரநாடு அல்லது மலைநாடு.

கொச்சிமலையாளத்துக்கு வடக்கு 16-கடிகையில்

207. திருவஞ்சைக்களம் சுவாமி அஞ்சக்களத்தீஸ்வரர் அம்மன் உமையாளம்மை தீர்த்தம் சிவகங்கை இதற்கு வடக்கு கொடுங்களூரில் சித்திரைமீ இரேவதியில் அவதரித்த கழறிற்றறிவாரென்னுஞ் சேரமான்பெருமான் நாயனார் குதிரையின் மேல்-வந்து வெள்ளையானையின்மேற் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் ஆடிமீ சுவாதியிற் கைலாயத்திற் கெழுந்தருளிய தலம் சுந்தரபதிகம் 1. (மதராஸ் ரெயில்வே ஷோரனூர் இருஞாலக்குடை ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 4 மைல்)

திருச்சிற்றம்பலம்.

## கொங்குநாடு.

208. திரு அவிநாசி சுவாமி அவிநாசியீஸ்வரர் அம்மன் பெருங்கருணைநாயகி தீர்த்தம் முதலை சுந்தரமூர்த்திசுவாமிகள் புக்கொளியூரவிநாசியென்னுமக்கிரகாரத்திற்குத் தென்புறமிருக்குஞ் சிற்றேரியில் மூன்றுவருடத்துக்கு முந்தி முதலை பிடித்துத் தின்றபிள்ளையை அவ் ஏரியினீரில்லாக்காலத்தில் அப் பிள்ளையின் பிதா அன்னை இவர்கள் வருத்தத்தைக்குறித்துந் தன்னுமத்தை நிலை நிறுத்துமபொருட்டும் அடிமைத் திறத்தை வெளிப்படுத்துவதற்காகவும் சிவபெருமானடியார் வேண்டுவன வளிப்பதற்குச் சித்தமாய்க் காத்திருக்கின்றாரென்பதை யறிவித்தற்குந் தமிழ்ப்பாடலின் மகிமைதோற்றவும் பதிக மருளி ஏரி நிரம்ப நீர் பெருகச்செய்து அம்முதலையை அழைத்துப் பிள்ளையை உயிரும்வயதுங் குறைவுறாதுமிழச்செய்தப் பிள்ளைக்கு உபநயனமுஞ்செய்வித்த தலம் இப்போதும் அந்த ஏரிக்கரையில் அத் திருவிளையாடற்போல நடக்கும்படியாகிய குறிப்புக்களுடனுலயமிருக்கின்றது சுந்தரபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 11 மைல்) அதற்குத் தென்கிழக்கு 3-கடிகையில்.

209. திருமுருகன்பூண்டி சுவாமி முருகேஸ்வரர் அம்மன் ஆவிடைநாயகி ஆவிடைதீர்த்தம் சிவபெருமான் பூதங்களை வேடராயனுப்பிச் சுந்தரமூர்த்திசுவாமி பொருளைப்பறித்து மறுபடிகொடுத்துப் பதிகம் பெற்றதலம் சுந்தரபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 8 மைல்) அதற்கு வடகிழக்கு 25-கடிகையில்.

210. திருநணு (என்பது பவானிகூடல்) சுவாமி சங்கமுகநாதேஸ்வரர் அம்மன் வேதமங்கை தீர்த்தம் பவானிநதியுங் காவேரிநதியுங் கூடுஞ்சங்கமம் திருஞானபதிகம் 1. (மதராஸ்

சதரன் மராட்டா ரெயில்வே ஈரோடு ஸ்டேஷனிலிருந்து வட மேற்கு 8 மைல்) அதற்குத்தெற்கு 10-கடிகையில்.

211. திருச்சங்குன்றூர் (என்பது திருச்சங்கோடு) சுவாமி அர்த்தநாரீஸ்வரர் அம்மன் அர்த்தநாரீஸ்வரி மலையின்மேலிருக்கின்றது பிரிங்கிமகரிஷிக்காக வந்த அவதாரம் சுவாமி திருமேனி விபூதிநிறம் திருவடியின் கீழ்கங்கை சங்குதீர்த்தம் திருஞான பதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே சங்கிரிதுருக்கம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 5 மைல்) அதற்குத் தென்கிழக்கு 25 கடிகையில்.

212. திருவெஞ்சமாக்கூடல் சுவாமி விகிர்தேஸ்வரர் அம்மன் விகிர்தேஸ்வரி விகிர்ததீர்த்தம் சுந்தரபதிகம் 1.(தென் இந்தியா ரெயில்வே கரூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 12 மைல்) அதற்கு வடமேற்கு 18-கடிகையில்.

213. திருப்பாண்டிக்கொடுமுடி சுவாமி கொடுமுடிநாதேஸ்வரர் அம்மன் பண்மொழிநாயகி தீர்த்தம் காவிரி இதிற் பழனி ஆண்டவருக்குத் திருமஞ்சன தீர்த்தந் தினங்காவடி கட்டி எடுத்துக்கொண்டுபோய் அடியார்க்கெளிய ரென்னும் நம்மிறைவருள் குமாரவேளாகிய தெண்டாயுதபாணிக்கு அபிஷேகஞ்செய்கிறது முண்டு திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே கொடுமுடி ஸ்டேஷனிலிருந்து வடக்கு ¼ மைல்) அதற்குக் கிழக்கு 10-கடிகையில்.

214. திருக்கருவூர் திருவானிலை சுவாமி பசுபதீசுரர் அம்மன் கிருபாநாயகி திருஞானபதிகம் 1. (தென் இந்தியாரெயில்வே கரூர் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 1½ மைல்) கொங்குநாடு ஆக 7-ம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## நடுநாடு அல்லது மகதநாடு.

215. திருஅரத்துறை, சுவாமி அரத்துறையப்பார், அம்மன் ஆனந்தநாயகி, தீர்த்தம் வெள்ளாறு, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமி மாறன்பாடியில் வந்திருக்கும்போது அரத்துறைக்கு மேற்கு ¾-கடிகை நெய்வாசலென்கின்ற திருநெல்வாயிலிருந்து பிராமணர்கள் சிவபெருமானுத்தரவின் பிரகாரம் மேற்படி சுவாமிகளுக்கு முத்துச்சிவிகை முதலிய திருச்சின்னங் கொடுத்ததலம். ஆதித்துறை காரியனூர் அதன் கிழக்கு திருவாலத்துறை, அதன்கிழக்குத் திருமாந்துறை, அதன் கிழக்கு ஆடுதுறை, அதன் கிழக்குத் திருவதிட்டத்துறை என்னுந்திட்டக்குடி, அதன்கிழக்கு அரத்துறை, அதன் கிழக்குத்திருக்கைத்துறை இந்தத்துறை ஏழும் சப்தவிருடிகள் பூசைசெய்யவேண்டுபதற்கு நீ வாவென்று கூப்பிட்டதாக ஐதீகம் ஆனதால் நீவாநதியென்று அந்நீவாநதியே வெள்ளாறெனவும் வழங்குகின்றது. திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 1, ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 34 மைல்) அதற்கு வடகிழக்கு 3-கடிகையில்.

216. திருத்தூங்கானைமாடம் (என்பது பெண்ணாடகம்) சுவாமி சுடர்க்கொழுந்தீஸ்வரர் அம்மன் கடந்தைநாயகி கஜவிமானம் பிரளயங்காத்தபீசுரர் தீர்த்தம் வெண்ணைநதி கலிக்காமநாயனுர் முத்திஸ்தலம் திருஞானபதிகம் 1. திருநாவுபதிகம் 1, ஆக 2. (தென்இந்தியா ரெயில்வே சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 30 மைல்) அதற்குக் கிழக்கு 1½-கடிகையில்.

217. திருக்கூடலையாற்றூர் சுவாமி நெறிகாட்டு நாயகர் அம்மன் புரிகுழலாம்பிகை சங்குதீர்த்தம் வடமேற்கிலிருந்து மணிமுத்தாநதியுந் தென்மேற்கிலிருந்து நீவாநதியும் இரண்டும் கூடிக்கிழக்கே நோக்கின்றபடியாற் கூடலையாற்றூரென்றுரைப்

பார்கள் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்புரம்பியமென்னுங் கிராமத்தினின்று எழுந்தருளி அத்தலத்துக்குச் சமீபமாகச்செல்லுகின்றவரித்தலத்தை விட்டுவிருத்தாசலத்துக்குச் செல்லுங்கருத்தினராய் நடக்குங் கானடவையுற் சிவபெருமான் ஒருபிராமணராய் நின்றுக்கொண்டு அப்பரே விருத்தாசலத்துக்கேகு மார்க்கமெதுவெண சிவபிரானுகிய அப்பரும் இக்கூடலையாற்றூர் மார்க்கமாய்ச் செல்லுகின்ற தென்றழைத்துக்கொண்டுவந்து கூடலையாற்றுக்குச்சமீபத்தில்விட்டு மறைந்ததாரதுகண்டாராமைமேற்கொண்டு பாடியருளியதலம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 16 மைல்) அதற்கு மேற்கு 6-கடிகையில்.

218. திருவெருக்கற்றம்புலியூர் (என்பது இராஜேந்திரன் பட்டணம்) சுவாமி நீலகண்டேசுரர் அம்மன் நீலமலர்க்கண்ணியம்மை தீர்த்தம் நீலோற்பலம் நரேந்திரனுண்டதலம் சாரங்கன் வெள்ளெருக்கஞ் செடியின்கீழ் சுவாமி யுற்பவம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 24 மைல்) அதற்கு 20-கடிகையில்.

219. திருத்திணைநகர் (என்பது தீர்த்தனகர்) சுவாமி திருந்தீஸ்வரர் அம்மன் ஒப்பிலாநாயகி திருந்துதீர்த்தம் விருக்ஷம் கொன்றை திணைபமுதுவைவேதனம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே பறங்கிப்பேட்டை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 7 மைல்) அதற்கு வடகிழக்கு 5-கடிகையில்.

220. திருச்சோபுரம் (என்பது தியாகவல்லி) சுவாமி சோபுரநாதர் அம்மன் சோபுரநாயகி சோபுரிதீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியாரெயில்வே ஆலப்பாக்கம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு $1\frac{1}{2}$ மைல்) அதற்கு வடமேற்கு 19-கடிகையில்.

221. திருவதிகை சுவாமி வீரட்டேசுரர் அம்மன் திரிபுரசுந்தரி இஃதட்ட வீரட்டத்திலொன்று திரிபுரதகனம் தீர்த்தம்

கடிவாதி அப்பர்சுவாமிகளுக்குச் சூலைநோய் விட்ட தலம் ஷை சுவாமிகள் அந்த திருப்படிக்கு கூற்றாயினவாறு விலக்கிலி லொன்று திருப்பதிகம்பாடி வழிபட்டதலம் அச்சந்நிதிக்கீசான பாகத்தில் அப்பர்சுவாமி சிவபெருமானை வழிபட்டஇந்த மட மொன்றின்னமும் வழங்குகின்றது. பிரைகாணியாய்ச் சிவ பெருமானுந் தேவியுந் தக்ஷணமுகமாக விருந்து திரிபுரசம்மாரம் பண்ணின அவதாரமிருக்கின்றது. விருக்ஷம் சரக்கொன்றை அப்பர்சுவாமிகளுக்குச் சூலைநோய் நீக்கியதீர்த்தம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சித்தவடமட்டத்திற்றிருவடிசூட்டினதலம் திரு ஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 16, சுந்தரபதிகம் 1, ஆக 18 அதற்குமேற்கு 5-கடிகையில் திருவாமூரில் பங்குனிமீ உரோ குணியிலப்பர் சுவாமி கடிருவவதாரம் வேளாளமரபு உழவாரப பணிவிடையுடன் அரனைப்பாடுந்திருத்தொண்டு அப்பர்சுவாமி களும் பசுபதீஸ்வரருந் திரிபுரசுந்தரி யம்மையுமுடைய ஆலயம் ஷை யூரிலிருக்கின்றது. அப்பர்சுவாமிகளை முன்னீற்றையி லிட்டவிடம் இப்போதோடையாக விருக்கின்றது. அதுதான் தீர்த்தம் (தென் இந்தியா ரயில்வே பண்ருட்டி ஸ்டேஷனிலிரு ந்து கிழக்கு 1 மைல்) ஷை அத்திசைச்குத் தென்மேற்கு 10-கடிகையில்.

222. திருநாவலூர் சுவாமி நாவலேஸ்வரர் அம்மன் சுந்தர நாயகி கருடதீர்த்தம் ஆவணிமீ உத்திரநக்ஷத்திரத்திற் றிடபலக் கினத்திற் சுந்தரமூர்த்தி சுவாமி கடிருவவதாரம் ஆதிசைவப்பிரா மணமரபு அரனைப்பாடுந் திருத்தொண்டு சடையநாயனார் இசை ஞானிநாயனார் புகழ்த்துணைநாயனார் முத்திஸ்தலம் நாவல்விரு க்ஷம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே பண்ருட்டி ஸ்டேஷனிலிருந்து மேற்கு 12 மைல்) அதற்குத் தெற்கு 15-கடிகையில்.

223. திருமுதுகுன்றம் (என்பது விருத்தாசலம் சுவாமி பழமலைநாதர் அம்மன் பெரியநாயகி தீர்த்தம் மணிமுத்தாநதி

விருக்ஷம் வன்னி சுந்தரமூர்த்தி சுவாமிகளாலயத்துட்சென்று சிவபெருமானைக்காணாது இரண்டாம் பிரகாரத்தில் வரும்போது தக்ஷிணாமூர்த்தி சந்நிதிக்குப்பக்கத்தில் நம்பி உருவமுற்றிருக்கக் கண்டு பரவையாருக்குப் பணம் வேணுமென்று பாடிக்கேட்டாருடனே நம்பியென்றுபாடச் சொல்லித் தாம் பொன்றருகிறோமென்று திருப்பதிகமு மொப்புக்கொண்டப் பொருளைக்கொடுத்தருளினது மன்றி மணிமுத்தாற்றிற் செம்பொன்னைக்கிப்போட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் வந்தெடுத்துப் பாசியாலமுங் கேறியிருக்கக்கண்டு அவரிடத்திலிருந்த மச்சத்தையும் அப்பொன்னையும் மாற்றுரைத்துச் சரியாயிருந்தபடி அருளிய தலம், திருவாரூரிற் கமலாலயம் கீழ்க்கரையிற் கஜமுகரூபமாக மாற்றுரைத்த பிள்ளையாரும் மேற்படி முதுகுன்றத்திலுமப்படியே விநாயகரும் இருக்கின்றது திருஞானபதிகம் 7, திருநாவுபதிகம் 1, சுந்தரபதிகம் 3, ஆக 11 (தென் இந்தியா ரெயில்வே சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 34 மைல்) அதற்கு வடமேற்கு 15-கடிகையில்.

224. திருநெல்வெண்ணை (என்பது நெய்வெண்ணை) சுவாமி வெண்ணெயப்பர் அம்மன் நீலமலர்க்கண்ணுபகி வெண்ணைத்தீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே மாம்பழப்பட்டு ஸ்டேஷனிலிருந்து தெற்கு 19 மைல்) அதற்கு வடமேற்கு 10-கடிகையில்.

225, திருக்கோவலூர் (என்பது கீழூர்) சுவாமி வீரட்டேசுரர் அம்மன் சிவானந்தவல்லி தீர்த்தம் பெண்ணைநதி இஃதட்டவீரட்டத்திலொன்று அந்தகாசுரனை வதைசெய்ததலம் திருஞானபதிகம் 1, திருநாவுபதிகம் 1, ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே திருக்கோயிலூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 1 மைல்) அதற்கு வடகிழக்கு ¾-கடிகையில்.

226. திருவறையணிநல்லூர் (என்பது அறைகண்டநல்லூர் சுவாமி அறையணிநாயகர் அம்மன் அருளநாயகியம்மை பாண்டவ தீர்த்தம் ஆறணிய தீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே திருக்கோயிலூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 1 மைல்) அதற்குத் தென்கிழக்கு 7½-கடிகையில்.

227. திருவிடையார் சுவாமி இடையாற்றீஸ்வரர் அம்மன் சிற்றிடைநாயகி தீர்த்தம் சிற்றிடை சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே மாம்பழப்பட்டு ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 9 மைல்) அதற்குக்கிழக்கு 2½-கடிகையில்.

228. திருவெண்ணைநல்லூர் சுவாமி தடுத்தாட்கொண்டஈஸ்வரர் அம்மன் வேற்கண்ணம்மை தீர்த்தம் பெண்ணை நதி சுந்தரமூர்த்தி சுவாமிகளை தியாகராஜர் தடுத்தாட்கொண்ட தலம் அவ்விடத்துச் சிவபெருமான் இடபாரூடராயிருக்கின்றார் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே மாம்பழப்பட்டு ஸ்டேஷனிலிருந்து தெற்கு 6 மைல்) அதற்கு வடமேற்கு 10-கடிகையில்.

229. திருத்துறையூர் (என்பது திருத்தலூர்) சுவாமி பசுபதீஸ்வரர் அம்மன் பூங்கோதைநாயகி சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத்திருவடி சூட்டியதுந்தவிர குருமுகூர்த்தமா யெழுந்தருளியுபதேசமுஞ்செய்த முகூர்த்தம் சிட்டகுருநாதர் சிவலோகநாயகியம்மை சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே பன்ருட்டி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 5 மைல்) அதற்கு வடகிழக்கு 1-கடிகையில்.

230. திருவடுவூர் (என்பது ஆண்டார்கோயில்) சுவாமி வடுகீஸ்வரர் அம்மன் வடுவகிர்கண்ணி பஞ்சநதீஸ்வரர், திரிபுரசுந்தரி திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே கண்டமங்கலம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 2 மைல்) அதற்குத் தென்கிழக்கு 10-கடிகையில்.

231. திருமாணிக்குழி, சுவாமி மாணிக்கவரதேஸ்வரர், அம்மன் மாணிக்கவல்லி-மாணிக்கதீர்த்தம்-வாமனவதாரத்தில் விஷ்ணு பூசித்ததலம் இஃதன்றி அவ்விஷ்ணுவுக்குதைசயோகள் தானமென்று பிரசன்னபடலமெப்போதும் போட்டதில் வழா வது ருத்திராபீமருத்திரர் என்ற வுருவமெழுதியிருக்கின்றது அவர் காவலாகவிருக்கிறார் மேற்படி பிரசன்ன படலத்துக்கே சோடசவுபசாரமு மருச்சனையுநடந்து அர்க்கியாராதனை செய்யும் போது மேற்படி படலத்தை நீக்கித்தரிசனஞ்செய்கிறது, இன்னம் வணிகருக்குதவிசெய்ததினாலுதவி நாயகரென்றும் அம்பலக் கண்ணியம்மை என்று பெயர் கொண்டம் சுவாமிகளுண்டு, கொன்றைவிருக்ஷம் திருஞானபதிகம். 1. (தென் இந்தியா ரெயில்வே திருப்பாபுலியூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 5 மைல்) அதற்கு வடகிழக்கு 5-கடிகையில்.

232. திருப்பாதிரிப்புலியூர் சுவாமி தோன்றாத்துணைநாதா அம்மன் தோகாம்பிகை சிவபெருமானப்பர் சுவாமிகளைக் கடலினின்றுங் கரையேற்றிவிட்ட தலம் பாதிரிவிருக்ஷம் திருஞான பதிகம் 1. ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே திருப்பாபுலியூா ஸ்டேஷனிலிருந்து மேற்கு ½ மைல்) அதற்கு வடமேற்கு 5-கடிகையில்.

233. திருமுண்டீச்சுரம் (என்பது திருக்கண்டீச்சுரம்) சுவாமி முண்டீச்வரர் அம்மன் கானார்குழலீ நடனபாதேஸ்வரர் அம்மன் அஸ்தகாளாம்பிகை-முண்டகதீர்த்தம் திருநாவுபதிகம் 1. (தென் இந்தியா ரயில்வே நெல்லிகுப்பம் ஸ்டேஷ வடமேற்கு 1 மைல் அதற்கு வடமேற்கு 13-கடிகையில்.

234. திருப்புறவார் பனங்காட்டூர் (என்பது பனையபுரம்) சுவாமி பனங்காட்டீஸ்வரர் அம்மன் திருப்புறவம்மையன் பதும தீர்த்தம் சிபிச்சக்கிரவர்த்திக்குத் தரிசனந்தந்ததலம் தாலவிருக்ஷம்

திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே விழுப்புரம் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 10 மைல் அதற்குமேற்கு 4-கடிகையில்.

235. திருவாமாத்தூர் சுவாமி காமார்த்தேஸ்வரர் அம்மன் அழகியநாயகி பதுமதீர்த்தம் கோடிமகாரிஷியும் பசுவும் பூசையாற்றியதலம் வன்னிவிருக்ஷம் திருஞானபதிகம் 2, திருநாவுபதிகம் 2-சுந்தரபதிகம் 1, ஆக 5. (தென் இந்தியா ரெயில்வே விழுப்புரம் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 3 மைல்) அதற்கு வடமேற்கு 30-கடிகையில்-

236. திருவண்ணாமலை சுவாமி அருணசலேஸ்வரர்-அம்மன் உண்ணாமுலையாள் தீர்த்தம் சிவகங்கை பிரமதீர்த்தம் திக்குப்பாலகர் தீர்த்தங்கள் முதலிய அனேகதிவ்விய தீர்த்தங்கள் சிவபெருமான் வல்லாளராசனுக்கு புத்திரனாகத்தோன்றி யுத்தரகிரியையுஞ்செய்தனர் இரண்டாம்பிராகார மேற்புரத்தில் விஷ்ணு புள்ளாங்குழல் வாயில்வைத்துதிக்கொண்டிருக்கிறார் இவ்வாறே திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பதிகத்திலுங் கட்டளையிட்டிருக்கின்றது பிரமவிஷ்ணுக்களுடைய மமகாரந்தீர வாக்ஞாபித்தப்பிரகாரம் விஷ்ணுவானவர் வராகவுதாரமாய் திருவடியைத்தேடிக்காணதயாவும் பிரமதேவன் அன்னரூபமாய் திருமுடியைத்தேடி மொழிமாறித் துக்கத்தை யடையவுஞ் சிவபெருமானக்கினிமலையாயெழுந்த தலம் அம்மலை கிரேதாயுகத்தில் அக்கினிமலையாயும் திரேதாயுகத்தில் சுவர்ணமலையாயும் துவாபரயுகத்தில் தாம்பிரமலையாயும் கலியுகத்திற் கன்மலையாயுமிருக்கின்றது அத்தல நினைக்க முத்திஸ்தலம் கார்த்திகைமீ கார்திகைநட்சத்திரத்தில் சிவபெருமான் சுடரொளித் தீபதரிசனம். திருஞானபதிகம் 2 திருநாவுபதிகம் 3 ஆக 5. (தென இந்தியா ரெயில்வே திருவண்ணாமலை ஸ்டேஷனிலிருந்து மேற்கு ½ மைல்) ஆக நடுநாடு 22-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## தொண்டைநாடு காமகோடி பீடமாகிய.

237. திருகச்சியேகம்பம் (என்பது காஞ்சிபுரம்) சுவாமி ஏகாம்பரநாதர் அம்மன் காமாட்சியம்மை தழுவக்குழைந்தவர் அத்தலத்திலிரண்டாம் பிரகாரத்தென்பாலில் பிரமனாற் பூசிக்கப் பட்டவர் வெள்ளைக்கம்பனென்றும் வடபுறத்தில் விஷ்ணுவாற் பூசிக்கப்பட்டவர் கள்ளக்கம்பனெனவும் பெயர்பெற்றிரண்டு சிவலிங்கப் பெருமானுமெழுந்தருளியிருக்கின்றனர் மேற்படி ஆடிசன்பேட்டையில் திருக்குறிப்புத் தொண்டநாயனார் ஆலயம், அந்தவாலயத்தில் ஐந்தாம்பிரகாரத்தென்னண்டையிற் பிரிதிவு தலம், தீர்த்தம் சிவகங்கை கம்பாநதிவார தீர்த்த முதலிய வனந்த புண்ணிய தீர்த்தங்களுமுண்டு விருக்ஷம் மாமரம் திருஞான பதிகம் 4 திருநாவுபதிகம் 8 சுந்தரபதிகம் 1 ஆக 13. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1 மைல்) அதற்குத் தென்மேற்கு 1-கடிகையில்.

238. திருமேற்றளி (என்பது கச்சிமேற்றளி) சுவாமி திருமேற்றளிநாதர் அம்மன் காமாக்ஷியம்மை திருநாவுபதிகம் 1, சுந்தரப்பதிகம் 1 ஆக 2. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 1½ மைல்) அதற்கு வடக்கு 1-கடிகையில்.

239. திருவோணகாந்தன்றளி, சுவாமி ஓணகாந்தீஸ்வரர் அம்மன் காமாக்ஷியம்மை சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குப் பொற்காசளித்ததலம் ஓணனென்றுங் காந்தனென்றும் பெயரையுடைய விரண்டசுரராற் பூசித்ததலம் ஓணகாந்த தீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு ½ மைல்) அதற்குத்தெற்கு ½-கடிகையில்.

240. திருவனேகதங்காவதம் (என்பது கச்சியனேக தங்காவதம்) சுவாமி திருவனேக தங்காவதேஸ்வரர் அம்மன் காமா

ட்சியம்மை தாணுதீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு ½ மைல்) அதற்கு கிழக்கு 2-கடிகையில்.

241. திருக்கச்சிநெறிக்காரடு (என்பது திருக்காலீஸ்வரர் கோவில்) சுவாமி காரைத்திருநீதேஸ்வரர் அம்மன் காமாட்சியம்மை காஞ்சிமுதலிய்வைந்து தலங்கட்கும் அம்மன் முற்சொல்லிய காமாட்சியம்மை ஆகையால் மேற்படி கச்சியேகம்பத்தை காமகோடி பீடமென்றுரைப்பது இந்திரதீர்த்தம், காரைதீர்த்தம் திருஞானபதிகம் 1, (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 1 மைல்) அதற்குதெற்கு 1-கடிகையில்.

242. திருக்குரங்கணின்முட்டம் சுவாமி வாலீஸ்வரர் அம்மன் இறையார்வளைநாயகி கொய்யாமலீஸ்வர ரென்றொரு பெயர் சுவாமிக்கு வழங்குகிறது வாலிதீர்த்தம் நளகங்கை அதில் குரங்கு, அணில், காக்கை பூசித்ததலம், திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 1 மைல்) அதற்குத் தென்கிழக்கு 5-கடிகையில்.

243. திருமாகரல் சுவாமி மங்கலங்காத்த வரதேஸ்வரர் அம்மன் திருபுவனநாயகி நவ்விதீர்த்தம் புத்துவளையிலிருந்து சிவபெருமானுடையமான தலம் உடும்புதழுவிக்கொண்டிருக்கின்றது திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 12 மைல்) அதற்கு தென்மேற்கு 12-கடிகையில்.

244. திருவோத்தூர் சுவாமி வேதநாதேஸ்வரர் அம்மன் இளமுலைநாயகி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஆண்பனையைப் பெண்பனையாக்கிய தலம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 18 மைல்) அதற்கு வடக்கு 8-கடிகையில்.

245. திருப்பனங்காட்டூர் (என்பது வன்பார்த்தான்பனங்காட்டூர்) சுவாமி பனங்காட்டீஸ்வரர் அம்மன் அமுதவல்லியம்மை பனம்பழம் சிவபெருமானுக்கு நிவேதனமாகுந்தலம் சந்நிதியில் சமநிலையாக இரண்டுபனை விருட்சங்களிருக்கின்றன சம்பந்ததீர்த்தம் அப்பர்தீர்த்தம் சுந்தரதீர்த்தம் அதற்குதெற்கு ஒரு கடிகையில் வன்பார்க்கம் சுவாமி இராமசாமி ஈஸ்வரர் அம்மன் பஞ்சின்மெல்லடியம்மை அம்மார்க்கத்திற் சுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளிவந்தபோது சிவபெருமான் பிராமண வேடம் பூண்டுவந்து கொடுத்த கட்டமுதைப் புசித்தவுடன் பிராமணரை நோக்கி எவ்வூரென்று கேட்க வன்பார்க்கத்துக்கும் பனங்காட்டூருக்குமாக இருப்போமென்று சொல்லி மறைந்தருளினர் உடனே யிதுவுஞ் சிவபெருமானுடையலெனத்தேர்ந்து திருப்பதிகம் பாடியருளினார் இவ்விருதலத்திற்கும் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே காஞ்சிவரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 15 மைல்) அதற்கு வடமேற்கு 20-கடிகையில்.

246. திருவல்லம் சுவாமி வல்லநாயகேஸ்வரர் அம்மன் வல்லாம்பிகை தீர்த்தம் திருவல்லம் வாலாம்பேட்டை மலையில் கஞ்சாசுரரக்ஷதனென்ற ஒரு அசுரனைச் சங்காரஞ்செய்ததாகப் புராணமிருக்கிறது மேற்படி தலத்தில் நந்திகேஸ்வரர் கிழக்கு முகமாகவிருக்கின்றார் திருஞானபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருவல்லம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு ½ மைல்) அதற்குக் கிழக்கு 19-கடிகையில்.

247. திருமாற்பேறு சுவாமி மால்வணங்கேஸ்வரர் அம்மன் கருணைநாயகி விஷ்ணு பேறுபெற்றதலம் அரிதீர்த்தம் திருஞானபதிகம் 2 திருநாவுபதிகம் 4 ஆக 6. (தென் இந்தியா ரயில்வே பள்ளூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 2 மைல்) அதற்கு வடகிழக்கு 5 கடிகையில்.

248. திருவூறல் (என்பது தக்கோலம்) சுவாமி உமாபதீஸ்வரர் அம்மன் உமாதேவி சேலநாதவீஸ்வரர் சரிசரகண்ணியம்மை யெனவழங்குகிறது தீர்த்தம் ஊறல் இதற்கு வடகிழக்கிற் சமீபத்தில் கங்காதரவீஸ்வரர் மோகனவல்லியெனப் பெயர் வாய்ந்த சுவாமி யம்மையுடைய வேறாலயமிருக்கின்றது அவ்வாலயத்தில் நந்தியின் வாயினின்றும் கங்கையுதையுமாகிய அச்சிவபிரானை வலமாகப் பிரதக்கணஞ் செய்துகொண்டு மேற்படி உமாபதீஸ்வரர் துஜஸ்தம்பத்தினிடமான நந்தி யருகில் வந்து குளத்திற்றேங்கி காற்வாய் வழிபாய்க் கழனிகளிற் செல்லுகின்றது திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே, தக்கோலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 6 மைல்) அதற்கு தென்கிழக்கு 5-கடிகையில்.

249. திருவிலம்பியங்கோட்டூர் சுவாமி சந்திரசேகரேஸ்வரர் அம்மன் கோடேந்துமாமுலைபாள் வேதநாயகர் கதிர் முலையம்மை யெனவுமிக்காலத்தில் வழங்குகின்றது அரம்பையர் பூசித்த தலம் இந்து தீர்த்தம் திருஞானபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே மணவூர் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 6 மைல்) அதற்கு வடகிழக்கு $1\frac{1}{2}$-கடிகையில்.

250. திருவிற்கோலம் (என்பது கூவம்) சுவாமி புராந்தகஈஸ்வரர் அம்மன் புராந்தரநாயகி தீர்த்தம் விற்கோலம் இத்தலத்தின் வடக்கொருகடிகையில் விர்த்த வீரநதி உத்தரவாகி நியாகவந்த விடத்திலொரு திடரில் உத்தேசம் அரைக்காணி நிலமணலாயிருக்கின்றது. அதிலூற்றுண்டாகி நான்கு காலத்துக்கும் திருமஞ்சனங்கொண்டுவந்து புனிதத்துடன் சிவலிங்கப் பெருமானுருக்கு அபிடேகம் செய்கின்றனர் தீண்டாத்திருமேனி கூபாக்கினி தீர்த்தம் திருஞானபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே மணவூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 4 மைல்) அதற்கு வடமேற்கு 3-கடிகையில்

251. திருவாலங்காடு சுவாமி அமுத தாண்டேஸ்வரர் அம்மன் வண்டார்குழலி காரைக்காலம்மை தலையானடந்து பங்குனியீ சோதியிற் சிவ பெருமான்றாயென வழைக்கப்பேயென்று சொல்லிக்கொண்டு திருவடியடைந்தலம் இரத்தன சபை பலாவிருக்ஷம் ஞானதீர்த்தம் திருஞானபதிகம் 1 திருநாவுபதிகம் 2. சுந்தரபதிகம் 1 ஆக. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருவாலங்காடு ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 6 மைல்) அதற்கு கிழக்கு 5-கடிகையில்.

252. திருப்பாசூர் சுவாமி பாசூர்நாதர் அம்மன் பசுபதி நாயகி இக்காலத்து வாசீரேஸ்வரர் சுயம்புவனிபம்மை யென வழங்குகின்றது மூங்கிலடியிற் சிவபெருமானுதித்த தலம் சோழனுக்கொரு காரணார்த்தமாகப் பாம்பாட்டியாகத் திருவுருக்கொண்டாடல் காட்டியதலம் திருஞானபதிகம் 1 திருநாவுபதிகம் 2, ஆக 3. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திவவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 2 மைல்) அதற்கு வடக்கு 8-கடிகையில்.

253. திருவெண்பாக்கம் (என்பது திருவழம்பூர்) சுவாமி வெண்பாக்க நாதர் அம்மன் கனிவாய்மொழியம்மை ஊன்றீஸ்வரர் மின்னலொளித்தாயென்று வழங்குகிறது கைலாய தீர்த்தம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் கோல்கொடுத்த தலம். இதற்குத் தெற்கு ½-கடிகையில் வெண்பாக்க மென்கிறதில் கைகாட்டிய நாதர் பரமேஸ்வரியம்மை யெழுந்தருளியிருக்கின்ற வோராலயமிருக்கின்றது சுந்தரபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 5-மைல்) அதற்கு வடகிழக்கு 10-கடிகையில்

254. திருக்கள்ளில் (என்பது திருக்கள்ளம்) சுவாமி சிவானந்த நாதர் அம்மன் ஆனந்தவல்லியம்மை தீர்த்தம் ஆனந்தம் ஞான பதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே

திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 14-மைல் அதற்கு வடமேற்கு 40-கடிகையில்.

255. திருக்காளத்தி சுவாமி காளத்திநாதர் அம்மன் ஞானப்பூங்கோதை பாம்பு யானை, சிலந்தி கண்ணப்பர் சுவாமிகள் நக்கீரர் சிவகோசரியார் முதலியோர் முத்தியுற்ற தலம் திருஞானபதிகம் 2-திருநாவுபதிகம் 1- சுந்தரபதிகம் 1. ஆக 4. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே காளஸ்திரி ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 4 மைல்) அதற்குத்தென்கிழக்கு 50-கடிகையில்.

256. திருவொற்றியூர் சுவாமி மாணிக்கத்தியாகர். அம்மன் வடிவுடையம்மை. ஆதிபுரீசுரர் திரிபுரசுந்தரியம்மை எனவும் வழங்குகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சங்கிலிநாச்சியாரைச் சிவபெருமான் திருமணஞ் செய்வித்த தலம். கலிநீதிநாயனார் வழிபாடாற்றி முத்தியுற்றதலம் அத்தலத்தின்கண் பட்டணத்துப் பிள்ளையார் திவ்வியசமாதியுமிருக்கின்றது. பிரமன் பூசித்ததலம் பிரமதீர்த்தம் மகிழவிருக்ஷம் திருஞானபதிகம் 1. திருநாவுபதிகம் 5-சுந்தரபதிகம் 2-ஆக 8. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே திருவொற்றியூர் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு ½ மைல்) அதற்குத் தென்மேற்கு 7-கடிகையில்.

257. திருவலிதாயம் (என்பது பாடி) சுவாமி வலிதாயநாதர் அம்மன் தாயம்மை தீர்த்தம் வலிதாயம் திருஞானபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே வில்லிவாக்கம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 2 மைல்) அதற்கு வடமேற்கு 5-கடிகையில்.

258. திருவடமுல்லைவாயில் சுவாமி மாசிலாமணியீசுவரர் அம்மன் கொடியிடைநாயகி தீர்த்தம் பாலாறு சுப்பிரமணியர் பூசித்ததலம் சுப்பிரமணியதீர்த்தம் ஆதொண்டைச் சக்கிரவர்த்தி வெட்டுத்தாங்கிச் சிவலிங்கப்பெருமானார் வெளிப்பட்ட

தலம் சுந்தரபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரெயில்வே அம்பத்தூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 3 மைல்) அதற்குத் தென்மேற்கு 3-கடிகையில்.

259. திருவேற்காடு ஸ்வாமி வேற்காட்டீஸ்வரர் அம்மன் வேற்கண்ணியம்மை வேற்கண்ணிதீர்த்தம் திருஞானபதிகம் 1. (மதராஸ் சதரன் மராட்டா ரயில்வே ஆவடி ஸ்டேஷனிலிருந்து வடக்கு 2 மைல்) அதற்குத் தென்கிழக்கு 10-கடிகையில்.

260. திருமைலாப்பூர் சுவாமி கபாலீஸ்வரர் அம்மன் கற்பகவல்லி கபாலீச்சுரம் கபாலிதீர்த்தம் மணிகர்ணிகைவிருக்ஷம் புன்னைகம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் என்பைப் பூம்பாவையென்னும் நாமத்தையுடைய வொருபெண்ணாகும்படி பாடியருளியதலம் பார்வதியார் மயிலாய்ப்பூசித்ததலம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 4 மைல்) அதற்குத் தென்கிழக்கு 3 கடிகையில்.

261. திருவான்மியூர் சுவாமி மருந்தீஸ்வரர் அம்மன் சொக்கநாயகியம்மை வான்மீகரிஷிக்குச் சிவபெருமான் நடனதரிசனங்காட்டியதலம் திருஞானபதிகம் 2 திருநாவுபதிகம் 1 ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 8 மைல்) அதற்குத் தென்மேற்கு 18-கடிகையில்.

262. திருக்கச்சூராரக்கோயில் சுவாமி விருந்திட்ட ஈஸ்வரர் அம்மன் அஞ்சனாட்சி சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அமுதுகொடுத்ததலம், விருந்து தீர்த்தம் சுந்தரபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே சிங்கப்பெருமாள் கோயில் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 1 மைல்) அதற்கு தென்கிழக்கு 5-கடிகையில்.

263. திரு இடைச்சுரம் சுவாமி இடைச்சுரநாதர் அம்மன் மடக்கொடிநாயகி இந்து ஞானபுரி யீஸ்வரர் கோவர்த்தனுடையாள் என்று வழங்குகின்றது மதுரதீர்த்தம் நான்குதிக்கும் பருப்பதங்கள் நந்திமலைக் கிர்த்திகைதீபம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே செங்கல்பட்டு ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 5 மைல்) அதற்குத் தெற்கு 5-கடிகையில்.

264. திருக்கழுகுன்றம் சுவாமி வேதகிரீஸ்வரர் அம்மன் பெண்ணினல்லாளம்மை பட்சிதீர்த்தம் நந்தீஸ்வரர்தீர்த்தம் கழுக்கள் பூசிக்குந்தலம் திருஞானபதிகம் 1 திருநாவுபதிகம் 1 சுந்தரபதிகம் 1 ஆக 3. (தென் இந்தியா ரெயில்வே செங்கல்பட்டு ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 9 மைல்) அதற்குத்தென்மேற்கு 20-கடிகையில்.

265. திருஅச்சிறுபாக்கம் சுவாமி பாக்கபுரேஸ்வரர் ஆக்ஷியீஸ்வரர் அம்மன் சுந்தரமின்னம்மை மரகதவல்லியம்மை திரிபுரதகனத்துக்குச் சிவபெருமான் இரதமேறியபோது அச்சிறவிநாயகரருளாலச்சுக் கூடியதலம் விருக்ஷம் கொன்றை சங்குதீர்த்தம் திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே அச்சிறுபாக்கம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு ½ மைல்) அதற்குத் தென்மேற்கு 25-கடிகையில்.

266. திருவக்கரை சுவாமி சந்திரசேகரஈஸ்வரர் அம்மன் வடிவாம்பிகை அன்றி அமுதாம்பிகை வக்கிராதசூரன் பூசித்த தலம் சந்திரதீர்த்தம் பிரமதீர்த்தம் திருஞானபதிகம்-1. (தென் இந்தியா ரெயில்வே புதுச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 12 மைல்) அதற்கு கிழக்கு, 6-கடிகையில்.

267. திரு அரிசிலி (என்பது ஒழுந்தியாப்பட்டு) சுவாமி அரிசிலிநாதர் அம்மன் பெரியநாயகி தீர்த்தம் அரிசில் திருஞான பதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே புதுச்சேரி ஸ்டேஷ

னிலிருந்து வடகிழக்கு 4 மைல் அதற்குத் தென்கிழக்கு 2-கடிகையில்.

268. திருவிரும்பை மாகாளம் சுவாமி மாகாளேஸ்வரர் அம்மன் குயின்மொழிநாயகி மதுசுந்தரநாயகியென வழங்குகின்றது. திருஞானபதிகம் 1. (தென் இந்தியா ரெயில்வே புதுச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 5 மைல்) ஆக தொண்டை நாட்டிலுள்ள திருப்பதியாகிய சிவஸ்தலங்கள் 32-ம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## துளுவ நாடு.

269. திருக்கோகரணம் சுவாமி மகாபலநாதர் அம்மன் கோகரணநாயகி கோகரணதீர்த்தம் இராவணேசுவரன் கைலாயத்திருந்து சிவபிரானனுக்கிரகத்தாற்கொண்டுவந்த சிவலிங்கபெருமானை வழியினின்று தந்திரத்தாற் கணபதிவாங்கிப் பிரதிட்டை செய்ததலம் திருஞானபதிகம் 1. திருநாவுகபதிகம் 1 ஆக 2. (கிரேட் இண்டியன் பெனிந்சுலா ரெயில்வே வார்டார் ஸ்டேஷனிலிருந்து 32 மைல்.)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## வடகருத திருசசிவஸதலம்.

270. திருப்பருப்பதம் சுவாமி பருப்பதநாதர் அம்மன் பருப்பதநாயகி தீர்த்தம் பாலாழி இதுவே மல்லிகார்ச்சுன பர்வதம நந்திகேசுசரர் பூசித்தமலை திருஞானபதிகம் 1. திருநாவுபதிகம்

1. சுந்தரபதிகம் 1-ஆக 3. (மதராஸ் சதரன் மராட்டா ரெயி ல்வே நந்தியால் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 60 மைல்.)

271. திருவிந்திர நீலப்பருப்பதம் சுவாமி நீலாசலநாய கேஸ்வரர் அம்மன் நீலாம்பிகை தீர்த்தம நீலாம்பிகை-திருஞான பதிகம் 1. (நேபாள ரெயில்வே காட்மாண்டு ஸ்டேஷனிலி ருந்து வடமேற்கு 8 மைல்.)

272. திருவனேகதங்காவதம் சுவாமி அருண்மனேஸ் வரர். அம்மன் மனோன்மணி ஞானதீர்த்தம் திருஞானபதிகம் 1. இமயகிரிமலையின் பேரில்.

273. திருக்கேதாரம் சுவாமி கேதாரநாதேஸ்வரர் அம்மன் கேதாரகௌரியம்மை மந்தாக்கினிதீர்த்கம் ஆறுமாதந் தேவதை களும் ஆறுமாத மனுடரும் பூசித்துவருந்தலம் திருஞானபதிகம் 1. சுந்தரபதிகம் 1-ஆக 2. இமயகிரிமலைபின் பேரில் வடக்கு 70.

274. திருநொடித்தான்மலை (என்பது ஸ்ரீகைலாயம்) சுவாமி பரமசிவம் அம்மன் பார்வதிதேவி அதுவே வள்ளியங் கிரி தீர்த்தம் சரவணப் பொய்கை திருஞானபதிகம் 3. திரு நாவுபதிகம் 4. சுந்தரபதிகம் 1. ஆக-7. வடபதி 5-ம். இமய கிரிமலையிற் பெரில்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக-திருச்சிவதலம் 274-க்கும் உள்ள திருப்பதிகம் 749-ம் திருஞான பொதுப்பதிகம் 7-ம் திருநாவுபொதுப்பதிகம் 37-ம் சுந்தரபொதுப்பதிகம் 4-ம் ஆக 797-ம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

## இராமேஸ்வரம்.

இச்க்ஷேத்திரத்தில் பிரம்ஹ ஹத்தியாதி பைசாச தோஷங்கள் ராகு தோஷம் சமஸ்தமும் நிவர்த்தியாகி நாகப்ரதிஷ்டை முதலியவை செய்வதால் மக்கட்பேறு முதலிய ஸந்தான ஸௌபாக்கியங்களை அடைகிறார்களென்பது சத்தியம்-சத்தியம் ஸ்ரீராமநாதஸ்வாமி பூஜைக்கு முந்தியே சுப்பிரமணியக்கடவுளாலும் அகஸ்தியமா முனிவராலும் பூஜிக்கப் பெற்றிருக்கிற குஹேஸ்வரர், அகஸ்தீஸ்வரலிங்கங்களுக்கு பூஜைகள் செய்யப்படுகின்றன. இவ்விடத்துள்ள கந்தமாதன பர்வதத்துக்கு-சுப்பிரமணியரைத் தாங்கினபடியால் காரணப்பெயராயிற்று. இவ்விடத்திலும் நாட்டுக் கோட்டையார் தர்மான்ன சத்திரம் எல்லாசாதியார்க்கும் சாப்பாடுமுதலிய தருமங்கள் மிகவும் சிரத்தையாகவும் பிரபலமாகவும் நடத்துகிறார்கள். இதைத்தவிர சேதுஸ்நாநகட்டத்திற்கு 3-மைல் வடக்கே முகுந்தராயர் தர்மான்ன சத்திரமும் இராமேஸ்வரம் டவுனில் தஞ்சாவூர் முதலிய ராஜாக்களின் சத்திரங்கள் ஆறுமிருக்கின்றன. ரெயில்வே ஸ்டேஷனில் பண்டாக்கள் (வைதீக கருமங்களை நடத்திவைக்கும் பிராமணர்கள்) எப்போதும் தயாராயிருப்பார்கள் மற்றப்படி கடைகண்ணிகள் ஜலசௌக்கியம் முதலியவைகளுக்கு எவ்வளவும் குறைவில்லை இராமேஸ்வரத்துக்கு வருவதற்கு முன்னால் ஆதிஸேது என்றும் தௌபாஷாணமென்றும் பெயர்பெறும் தேவிபட்டணத்துக்கு (இராமநாதபுரத்திலிருந்து வடக்கு 8-மைல்) சென்று சமுத்திரஸ்நானம் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டுவருவது யதோக்தமாகும் திருப்புகாலில் இராமநாதபுரத்திலிருந்து தெற்கே ஏழுமைலிலிருக்கிற மாணிக்கவாசக ஸ்வாமிகள் பாடல்பெற்ற திவ்யக்ஷேத்திரமாகிய உத்தரகோசமங்கைக்கும் அங்கிருந்து 8-மைலிலிருக்கிற (ஸ்ரீராமர் ஸேதுபந்தனத்துக்காக தர்பையில் படுத்துவிரதமிருந்தவிடம்) தர்பசயனத்துக்குசென்று ஸ்வாமி தரி

சனஞ் செய்யவேண்டியது முறைமையாகும் தர்ப்பசயனத்தில் பலவிதவர்ண ஓலைகளான மஞ்சட்பெட்டிகள் முதலியவையும் இராமேஸ்வரத்திற் பலவித சோழிகளும் நயமாய்கிடைக்கும இது சமுத்திர மத்தியிலுள்ள ஓர் புண்ணிய தீவானபடியால் கீழ்பூமி எல்லாம் மணற்சாரியாயும் காடுகள் நிறைந்தும் சமுத்திரத்தின்பேரிரச்சலாலும் அழகாலும் வெகுரமணீயகரமாயிருக்கும் இராமேஸ்வரசிவாலயத்தில் ஸேதுமாதவரென்னும் விஷ்ணுவாலயமும் மாதவதீர்த்தமும் சேர்ந்திருக்கிறது இராமேஸ்வர ஆலயத்தை வெகுவாய் விருத்திசெய்தவர் பாஸ்கர பதியாகிய இராமநாதபுரம் மகா ராஜா இப்புண்யவானின் பக்திசிரத்தையை எழுதிமுடியாது இவருடைய உருவம் பர்வத வர்த்தனி யம்மன் சந்நிதியிலும் மற்ற இடங்களிலும் வைக்கப்பட்டிருக்கிறது.

இவ்விடத்தில் காசியைப்போலல்லாது பிரதி நித்தியம் ஆறுகால பூஜைகளும் பிரம்மோற்சவம் முதலான உற்சவங்களும் வெகு ஒழுங்காயும சிரத்தையாயும் விமரிசையாயும் நடத்தப்படுகின்றன இப்பிரசித்த தேவாலயத்தில் இப்போது நாட்டுக்கோட்டையாரும் சம்பந்தப்பட்டு இன்னுமதிக விமரிசை செய்யப்பட்டு வருகின்றன.

ஷை ஷட்கால பூஜை விவரம்:—1. உஷத்காலம்:—திருவநந்தல், பொரி, தாம்பூலம், ஸ்படிகலிங்காபிஷேகம், நைவேத்தியம். 2. விளாபூஜை:—சுத்தசம்பா தோசை, அநந்தசயனம் ராஜா கட்டளை. 3. காலசந்தி:—புதுக்கோட்டை மகாராஜா கட்டளை கோயிலில் சேர்க்கபபட்டது. 4. உச்சிகாலம்:—சம்பா, பொங்கல், சர்க்கரைப் பொங்கல், வடை, பால்பாயஸம். 5. சாயரக்ஷை:—புளியோதரை, கோயிலார் விசாரணையில் பச்சைபப்ப முதலி கட்டளையில் சேர்க்கப்பட்டது. நாட்டுக்கோட்டையார் பால் கங்கை அபிஷேகம் 6. அர்த்தஜாமத்துக்கு:—மினகு சம்பா பள்ளியறைக்கு பால், பொரி, தாம்பூலம்; குறிப்பு:—காலசந்தியினும், சாயரக்ஷையிலும் நித்தியோற்சவமுண்டு.

பிரம்மோற்சவ விவரம்:—மகாமாதத்து கிருஷ்ண பக்ஷ சஷ்டியில் த்வஜாரோகணஞ் செய்து மஹா சிவராத்திரிக்கு தீர்த்தங்கொடுப்பது. முதல் திருவிழா:—பகல் வெள்ளி சபரம், இரவும் அதுவே. இரண்டாம் திருவிழா:—பகல் வெள்ளி சப்ரம் இரவு கற்பகவிருக்ஷம், காமதேனு, பெருச்சாளி, மயில், சப்ரம் இவைகளில் பஞ்சமூர்த்தி புறப்பாடு 3-ம் திருவிழா:—பகல் கந்தமான பர்வதத்துக்குப்போதல், இரவு பூதவாகனம், ஹிம்ஹ வாஹனம் 4-ம் திருவிழா:—பகல் சபரம், இரவு இராவணன் தாமரை 5-ம் திருவிழா:—பகல் சப்ரம், இரவு யானை பல்லக்கு 6-ம் திருவிழா:—பகல் சப்ரம், இரவு விருஷப வாஹனம் 7-ம் திருவிழா:—பகல் சப்ரம், இரவு சப்ரம், பின், சபாநாதர் புறப்பாடு 8-ம் திருவிழா:—பகல் சபாநாதர் இரவு குதிரை, கிளி வாஹனங்கள் 9-ம் திருவிழா:—பகல் இரதோற்சவம், இராத்திரி சண்டாளாபிஷேகம், மஹா சிவராத்திரி விசேஷம் 10-ம் திருவிழா:—தீர்த்தம் ஸ்ரீ இராமநாதர் சந்நிதியிலிருக்கின்ற சமுத்திர ஸ்நானகட்டமாகிய அக்னி தீர்த்தத்தில் கொடுக்கப்படுகிறது. சாயந்திரம் வசந்தோர்சவம் ராத்திரி பிக்ஷாடனம், அவரோஹணம். 11-ம் திருவிழா:—இராத்திரி சண்டோற்ம்.

ஆடிப்பூர உற்சவம் வெகு விமரிசையாய் பஞ்சமூர்த்தி புறப்பாடுடன் இராமதீர்த்த கரையில் நடக்கிறது இவைகளை தவிர மற்றப்படிக்குள்ள மாசிமகம் உத்தராயண தக்ஷிணாயன புண்ணிய காலங்கள், மஹாளய அமாவாசை முதலிய விசேஷ காலங்களில் ஸ்வாமி புறப்பாடும் தீர்த்தமுமுண்டு

இராமேஸ்வரத்திலுள்ள முக்கிய தீர்த்தங்கள்:—இருபத்திரண்டும் உப தீர்த்தங்கள் இருபத்தெட்டு முள்ளன. இவைகளின் விருத்தாந்தங்கள் * பெயரைப் பார்த்தமாத்திரத்தாலே விளங்கக்கூடியதே அவைகளை இங்கெழுதின் விரியுமாதலால்

ஆவயலிபகமுள்ளவர்கள் ஸேது புராணத்தால் தெரிந்துகொள்ளலாம். 1. சக்ரதீர்த்தம்:—நவபாஷாண மென்னும் தேவி பட்டணத்தில் பெருமாள் கோவிலுக் கெதிரிலுள்ளது (சமுத்திரம்) இந்த தீர்த்தமாகிய சமுத்திரம் சீதாபிராட்டியார் ஸ்நானஞ்செய்த காலத்து அலைகளடங்கினதா லதுமுதலப்படியேயிருக்கிறது. 2. வேதாள தீர்த்தம்:—தில்லை நாச்சியம்மன் கோவிலுக்குத் தெற்கு வெற்றிலை மண்டபத்துக்கு மேற்கில் ஆறு மைலிலிருக்கிறது. 3. பாபவிநாசம்:—வெற்றிலை மண்டபத்துக்கு வடக்கில் சமீபம். 4. சீதாகுண்டம்:—தங்கச்சி மடை மண்டபத்துக்கு வடக்கில் கால் மைல். 5. மங்களதீர்த்தம்:—தங்கச்சி மண்டபத்துக்குக் கிழக்கு சாலையில் கால்மைல். 6. அமிருதவாபி தீர்த்தம்:—ஏகாந்த இராமஸ்வாமி கோயிலில். 7. பிரம்ஹ தீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு வடக்கு அரை மைல். 8. ஹனுமந்த தீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு வடக்கு கால் மைல். 9. அகஸ்திய தீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு கிழக்கு கால் மைல். 10. இராமதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்கு மேற்கு கால் மைல். 11. இலக்ஷ்மண தீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்கு மேற்கு ஒரு மைல். 12. ஜடாயு தீர்த்தம்:— இராமேஸ்வரத்திற்குத் தெற்கு மூன்று மைல். 13. மகாலக்ஷ்மி தீர்த்தம்:—கீழக்கோபுரவாசலில் ஹனுமார் கோவில் சந்நிதிக்குத் தெற்கு. 14. அக்கினி தீர்த்தம்:—இராமேஸ்வர இராமனாதாலயத்துக்குச் சமீபம், கிழக்கு சமுத்திரம். 15 சக்ரதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்துள். 16. சிவகங்கை:—இராமநாதராலயத்துக்குள் சுவாமி அம்மன் கோயிலுக்கு மத்தியில். 17. சங்கதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்துள். 18. யமுனாதீர்த்தம். 19. கயா தீர்த்தம். 20. கவாதீர்த்தம். இம்மூன்றும் ஷை ஆலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்திலிருக்கின்றன. 21. சர்வதீர்த்தம்:—இராமனாதஸ்வாமி சந்நிதியின் கோயிலுக்குள். 22. தனுஷ்

கோடி:—பிரசித்தம் இராமேஸ்வரத்திலிருந்து தென்கிழக்காக பதினெட்டு மைல்.

உபதீர்த்தங்கள்:—1. பைரவதீர்த்தம்:—பாம்பன் சமுத்திரம். 2. கபிதீர்த்தம்:—பாம்பனில் திருக்குளம். 3. இரணவிமோசனதீர்த்தம்: ஏகாந்த இராமஸ்வாமிகோயிலுக்கு வடக்கு. 4. தனுசுதீர்த்தம்:—அதாவது வில்லூன்றி தீர்த்தம் தங்கச்சிமடத்துக்கு ஒருமைல் சமுத்திர சுத்தஜலம். 5. சுக்ரீவதீர்த்தம்:—கந்தமாதன பர்வதத்தின் பிரதக்ஷிணத்தில். 6. அங்கததீர்த்தம். 7. ஜாம்புவதீர்த்தம் இவ்விரண்டும் ஷை கந்தமாதன பிரதக்ஷிணத்தில் கந்தமாதன பர்வதசிகரத்தில் ஸ்ரீராமர் பாதங்கள் தெரிசன விசேஷம். 8. தர்மதீர்த்தம். 9. பீமதீர்த்தம். 10. அர்ஜுனதீர்த்தம். 11. நகுலதீர்த்தம். 12. ஸஹாதேவதீர்த்தம். 13. த்ரௌபத தீர்த்தம். 14. தேவதீர்த்தம். 15. இலங்கை மகாகாளி தீர்த்தம் இவைகளும் ஷை கந்தமாதன பர்வதபிரக்ஷிணத்திலமர்ந்திருக்கின்றன. 16. மாதவதீர்த்தம்:—பெரியகோயில் மேலக்கோபுர வாசலினருகில். 17. நளதீர்த்தம். 18. நீலதீர்த்தம். 19. கவாக்ஷதீர்த்தம. 20. கவேதீர்த்தம். 21. கந்தமாதன தீர்த்தம் இவ்வைந்தும் சேதுமாதவர் சந்நிதியிலிருக்கின்றன. 22. பிரய்ஹஹத்தியாவிமோசன தீர்த்தம். 23. சூரியபுஷ்கரணீ தீர்த்தம். 24. சந்திரபுஷ்கரணி தீர்த்தம் இம்மூன்று தீர்த்தங்களும் பெரியகோவிலின் இரண்டாம் ப்ராகாரத்திலமைக்கப் பெற்றிருக்கின்றன. 25. காயத்ரீதீர்த்தம். 26. சாவித்ரீதீர்த்தம். 27. சரஸ்வதிதீர்த்தம இம்மூன்றும், கீழகோபுரம் ராஜாசத்திரத்திற்குப் பின்னுள்ளன. 28. நாகதீர்த்தம்:—தர்மகர்த்தா மடத்தில்.

மற்றப்படி க்ஷேத்திரதீர்த்தவிதிகள் முதலத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கிறபடி க்ஷேத்திராடனம், தீர்த்தசிராத்தம், தர்ப்பணம் வபனம் முதலியவை அவரவர் சக்திக்குத்தக்கபடி யூந்து

ரூபாய் முதல் செய்யலாம் நிற்க மேற்கூறிய முக்கிய தீர்த்தங்களுக்குச் செலுத்தவேண்டியவும் ஸ்ரீ இராமநாதராலயத்தில் யாத்திரைவாசிகள் நடத்தும்படியான உபயங்களுக்கு செலுத்த வேண்டிய கட்டண விகிதங்களும் அடியிற் காண்க இக்கட்டணங்களில் சரிபாதி சர்க்காருக்குச் சேருகிறது.

கோடிதீர்த்த அபிஷேகக் குடம் ஒன்றுக்குக் காலணு தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்ய காய் ஒன்றுக்கு ஒரு அணு, அஷ்டோத்ர அர்ச்சனை ஒன்றுக்கு ஐந்தணு, சகஸ்ரநாம அர்ச்சனை ஒன்றுக்கு ஒரு ரூபாய், பாயஸநைவேத்தியத்துக்கு ஒரு ரூபாய், வடை பாயஸ நைய்வேத்தியத்துக்கு இரண்டு ரூபாய், கங்காபிஷேகம் தீர்த்தச் செப்பு ஒன்றுக்கு ஒன்றேமுக்கால் ரூபாய், உபயாபிஷேகம் நைவேத்தியமுள்பட ஐந்தரை ரூபாய், தங்கப்பல்லக்கு உற்சவத்திற்குப பதினேழரை ரூபாய், பஞ்சாமிருதாபி ஷேகத்துக்குப பத்தொன்பதே முக்கால்ரூபாய், பஞ்சமூர்த்திக்கு அபிஷேகத்துக்கும் உற்சவத்துக்கும் நூற்றைமபதுரூபாய், சங்காபிஷேகத்துக்கு முந்நூற்றைம்பது ரூபாய், மஹாபிஷேகத்துக்கு ஐந்நூறு ரூபாய.

ஸ்ரீ காசியில் இந்த நிற்பந்தங்களொன்றுமில்லை எந்ததீர்த்தத்தில் யாரெப்படி எவ்வளவெடுத்தாலும் கேள்விமுறையில்லை ஸ்ரீ விஸ்வேஸர் முதலான சந்நிதிகளிலும் யாதொரு நிர்பந்தமும் கிடையாது பரம ஏழையாகிய ஒருவனும் மஹாராஜனும் மற்றொருவனும் ஒரேவிதமாய்ப் பாவிக்கபட்டு இவ்விருவரும் தங்கள் சொந்தக்கையினாலேயே அபிஷேகாதி அர்ச்சனைதீபாராதனைகளுடன் நைவேத்தியாதிகளும் செய்யலாம் கங்காபுத்திராள் முதலானவர்களுக்குக் கொடுப்பது நிர்ப்பந்தமல்ல. அவரிஷ்டம் காசியாத்திரையில் பிரயாகையில் கங்கையையெடுத்துவருவது போலவே இவ்விடத்திலும் சர்வதீர்த்தம் கோடிதீர்த்த மிவைகளை யெடுத்துவந்து இல்லத்தில் பூஜைசெய்து அந்

தீர்த்தங்களை பந்துமித்திராதிகளுக்கீந்து பிராமண சமாராதனை யுஞ்செய்து யாத்திரையை சம்பூர்ணஞ் செய்யவேண்டியதும் முக்தவிதியாம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## வடநாட்டுத்தலங்கள்.

### காசிக்குச்செல்ல மார்க்கம்

சென்னப்பட்டணம் பீச் ஜங். ஸ்டேஷனிலிருந்து, கூடூர ஜங். ஸ்டேஷன்மார்க்கமாய், பெஜவாடா ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—பெஜவாடா (என்பது விஜயவாடா) (அருச்சுனன் பட்டினம்) இதன் தெற்கே 6 மைலில், அருச்சுனன் தவம் புரிந்த கனகதுருக்கம் மலையிருக்கிறது பெஜவாடா ஜங். ஸ்டேஷனுக்கும், குண்டக்கல் ஜங். ஸ்டேஷனுக்கும், மத்தியிலுள்ள நந்தியால் ஸ்டேஷனிலிருந்து, 270-திருப்பருப்பதம் முதலிய தலங்களுக்குப் போகும்மார்க்கம் பின்னுலிருக்கிறது. பெஜவாடாவிலிருந்து, ஐதராபாத் ஸ்டேஷனுக்குப்போகிற மார்க்கத்திலுள்ள போக்கில் குண்டா ஸ்டேஷனிலிருந்து வடக்கே 48 மைலில் பத்ராசலம் இருக்கிறது வழியில் 2-3, நதிகள் இருக்கின்றன.

பெஜவாடா ஜங். ஸ்டேஷனிலிருந்து ராஜமகேந்திரம் ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—ராஜமகேந்திரத்திற்கருகில் கோதாவரி நதியும் கோடிலிங்க தேவாலயமும், மார்க்கண்டேயர் ஆலயமும், 4-மைலில் தவளேசுரம் அணையுமிருக்கின்றன ராஜமகேந்திரத்திலி

ருந்து படகு மூலமாய் 60 மைலிள்ள பத்ராசலத்திற்குப் போக லாம் வழியில் தங்குமிடங்கள் 1 தாள்ளப்புடி, 2 தும்பிக்குடம், 3 பாபிகுண்டா படகு சார்ஜ் ரூபா 2.

ராஜ மகேந்திரத்திலிருந்து, சாமல்கட்டு ஜங். வால்டர் ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் ஸ்ரீகாகுளம் ஸ்டேஷனுக்குப் போக வேண்டும்.

குறிபபு:—இதன் மத்தியிலுள்ள விஜயநகரம் ஸ்டேஷனி லிருந்து 10 மைலிலுள்ள சிம்மாசலத்தில் நரசிம்மாலய மிருக்கி றது ஸ்ரீகாகுளத்திற்கு 8 மைலில் ஸ்ரீகூர்மம் (மகா விட்டுணு கூர்மாவதாரம்செய்த ஸ்தலம்) இருக்கிறது இதற்கு ஒருமைலில் அரசன்பல்லி கிராமத்தில் சூரியன் ஆலயமிருக்கிறது.

ஸ்ரீகாகுளத்திலிருந்து, கர்டாரோடு ஜங். ஸ்டேஷனுக்குப போகவேண்டும்.

குறிப்பு:—இவ்விடத்தில் ரயில் மாறி ஏறி, பூரி ஸ்டேஷ னுக்குப்போனல் சமீபத்தில் ஜகநாதமிருக்கிறது கர்டாரோடு ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் புவனேசுவரா பழைய தேவாலயங் களும், சில தீர்த்தங்களுமிருக்கின்றன.

கர்டாரோடு ஜங். ஸ்டேஷனிலிருந்து கட்டக் ஸ்டேஷ னுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—இதனருகே மகாநதி வருகிறது.

கட்டக் ஸ்டேஷனிலிருந்து மிதுனப்பூர் ஜங். சினி ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் அசன் சோல் ஜங். ஸ்டேஷனுக் குப் போகவேண்டும்.

குறிப்பு:—கல்கத்தாவுக்குப் போகவேண்டுமானல், மிது னப்பூர் ஜங். ஸ்டேஷனிலிருந்து கல்கத்தாவுக்குப்போய், பின் ஹாவ்ரா ஜங். ஹுக்லி ஜங். கானு ஜங். ஒண்டால் ஜங். ஸ்டே

ஷன்கள் மார்க்கமாய் அசன்சோல் ஜங். ஸ்டேஷனுக்குப் போய்ச்சேரலாம் கல்கத்தா என்பது காளிகட்டம் இதில் காளிகோயில் விசேடம் கங்காசாகரம் சமுத்திரஸ்நானம் விசேடம் மகா விஷேதநகர்.

அசன்சோல் ஜங். ஸ்டேஷனிலிருந்து, சீதாராமப்புரம் ஜங். அலிப்பூர் ஜங். மாடுப்பூர் ஜங். லக்கசராய் ஜங். கயா ஜங். சோணைக்கீழ்கரை ஜங். மோகல்சராய் ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் பனாரிஸ் ஜங். ஸ்டேஷனுக்குப் போய், இங்கிருந்து காசி கட்டம் ஸ்டேஷனுக்குப போகவேண்டும்.

☞ இதற்குச் சமீபத்தில் காசி க்ஷேத்திர மிருக்கின்றது.

குறிப்பு:—மேற்கண்ட கயாக்ஷேத்திரம் பிண்டம் போட வேண்டிய இடம். சோணைக்கரையிலுள்ள டீரி ஸ்டேஷனுக்குச் சமீபத்தில், கணபதி விக்கிரகம் அகப்படுகிற சோணபத்திரை நதி

லக்கசராய் ஜங். ஸ்டேஷனிலிருந்து காசிக்குச்செல்லும் மற்றோர் மார்க்கத்திலுள்ள பான்கிபூர் ஜங். ஸ்டேஷனிலிருந்து ஆஜிபூர் ஜங். மோஸபர்பூர் ஜங். சீகௌலி ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய், ராக்சால் ஸ்டேஷனுக்குப் போகவேண்டும் இங்கிருந்து இமயமலையில் 70 மைலில் நேபாள தேசத்தின் ராஜதானியாகிய காட்டுமாண்டு நகரமிருக்கிறது. இதற்கு 3 மைலில் ஒரு சிவக்ஷேத்திரமிருக்கிறது. இதனை 271 இந்திரநீலப் பருப்பதமென்பர், இதற்குச் சமீபத்தில் உருத்திராக்ஷ முண்டாகிற மோரங்கிமலை இருக்கிறது. இதன் வடகிழக்கே உலகத்திலுள்ள மலைகளிலெல்லாம் உபரமானசிகரத்தையுடைய எவரஸ்டென்னும் கௌரிசங்கரம் மலையிருக்கிறது. காட்டுமாண்டிலிருந்து அம்மலையின்மேலாகவே 273-திருக்கேதாரத்திற்குப் போக மார்க்க மிருக்கிறது, கட்டுமாண்டுக்குச் சமீப

சாளக்கிராமம் அகப்படுகிற கண்டகிநதி உற்பத்தியாகி பான்கிப்பூருக்குச் சமீபத்தில் கங்காநதியுடன் கலக்கிறது.

### காசிக்குச்செல்லும் மற்றோர் மார்க்கம்.

சென்னபட்டணத்திலிருந்து அரக்கோணம் ஜங். ரேணுகுண்டா ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் குண்டக்கல் ஸ்டேஷனுக்குப போகவேண்டும்.

குண்டக்கல் ஜங். ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மேலே சொல்லிய காசிமார்க்கத்திலுள்ள பெஜவாடா ஜங். ஸ்டேஷனுக்குப் போகிற ரயில்வேயில் நந்தியால் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே கற்சாலை மார்க்கமாய் 60 மைலில் 270-திருப்பருப்பதம (என்பது) ஸ்ரீசைலம் (மல்லிகார்ச்சுனம்) இருக்கின்றது.

குறிப்பு:—நந்தியாலுக்கு வடகிழக்கே 6 மைலில் மகாநந்தி விசேடம் இவ்விடத்தில் ஒங்காரமும் இருக்கிறது.

குண்டக்கல் ஜங். ஸ்டேஷனிலிருந்து கடக் ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—இதற்கு நடுவிலுள்ள தோரணகலு ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 12 மைலில் சொண்டூர் குமாரசாமி கோயில் மலையின்மேல் மிக்கவிசேஷமாயுள்ளது. ஒஸ்பெட் ஜங். ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 8 மைலில் அம்பீ விருபாக்ஷி சிவதலம், துங்கபத்திரை நதிக்கரையிலுள்ளது. மலையின்மேல் கோடி லிங்கங்கள்

குண்டக்கல் ஜங். ஸ்டேஷனிலிருந்து கடக் ஜங். ஹூப்ளி ஜங். லோண்டா ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் 269-திருக்கோகரணத்திற்குப் போய்ப்பின் புனா ஜங்க்ஷன் ஸ்டேஷனுக்குப்போய்ச் சேரலாம். இம்மார்க்கம் முன்னால் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது.

குறிப்பு:—லோண்டா ஜங். ஸ்டேஷனிலிருந்து பின்வரும் புனா ஜங். ஸ்டேஷனுக்கு நேரில் போகலாம்.

குண்டக்கல் ஜங். ஸ்டேஷனிலிருந்து, வாடி ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—இதன் மத்தியிலுள்ள துங்கபத்திரை ஸ்டேஷனுக்கருகில் துங்கபத்திரை நதியும், கிர்ஷ்ணா ஸ்டேஷனுக்கு அருகில் கிர்ஷ்ணா நதியும் ஓடுகின்றன. இவ்விரண்டும் 'வ விடங்களுக்குக் கிழக்கே சுமார் 60 மைலில கலக்கிறது.

வாடி ஜங். ஸ்டேஷனிலிருந்து, ஆட்ஜி ஜங். ஸ்டேஷன் மார்க்கமாய், பார்சிரோடு ஜங். ஸ்டேஷனுக்குப் போக வேண்டும்.

குறிப்பு:—பார்சிரோடு ஜங். ஸ்டேஷனிலிருந்து தெற்கே 30 மைலில் பீமா நதிக்கரையில் பாண்டரங்கம் இருக்கின்றது.

பார்சிரோடு ஜங். ஸ்டேஷனிலிருந்து, டோண்டு ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

குறிப்பு:—இதன் மத்தியிலுள்ள பொம்மல்வாரி, டிக்ஸால் டோண்டு ஸ்டேஷன்களுக்கருகில் ஒரு மைலில் கிர்ஷ்ணாநதியுடன் கலக்கிற பீமாநதி வருகிறது டோண்டு ஜங். ஸ்டேஷனிலிருந்து புனா, பம்பாய் முதலிய விடங்களுக்குப் போகாமல், மண்மாடு ஜங். ஸ்டேஷனுக்குபோகலாம்.

டோண்டு ஜங். ஸ்டேஷனிலிருந்து புனா ஜங். ஸ்டேஷனுக்குப்போகவேண்டும்.

குறிப்பு:—புனா விநோதநகர் புனாவிலிருந்து மகாபலி ஈசுரமாகிய 269 திருக்கோகரணத்திற்குப் போகும்மார்க்கம் முன்னால் தெளிவாயிருக்கிறது.

புறு ஜங். ஸ்டேஷனிலிருந்து, கலியாணி ஜங். ஸ்டேஷன் மார்க்கமாய், மண்மாடு ஜங். ஸ்டேஷனுக்குப் போக வேண்டும்.

குறிப்பு:—கலியாணி ஜங். ஸ்டேஷனிலிருந்து, பம்பாய்க்குப்போகலாம். இதுபெரிய பட்டணம் கலியாணி ஜங்ஷனுக்கும் மண்மாண்டு ஜங்ஷனுக்கும் மத்தியிலுள்ள நாசிகைரோடு ஸ்டேஷனிலிருந்து மேற்கே 6 மைலில் கோதாவரி நதியின் வடகரையில் நாசிகையும், தென்கரையில் பஞ்சவடியும், இதற்கு மேற்கு 8 மைலில் கோதாவரி உற்பத்தியாகிற இடமாகிய திரியம்பகமு மிருக்கின்றன இத்திரியம்பகத்தில் ஜோதிலிங்கமிருக்கின்றது.

மண்மாண்டு ஜங். ஸ்டேஷனிலிருந்து, சால்ஸ்கான் ஜங். ஜால்கான் ஜங். மார்க்கமாய், புஷாவால் ஜங் ஸ்டேஷனுக்குப போகவேண்டும்.

குறிபபு:—புஷாவாலுக்கு 2 மைலில் தபதிநதம் இருக

புஷாவால் ஜங். ஸ்டேஷனிலிருந்து காண்டுவா ஜங். ஸ்டேஷனுக்குப போகவேண்டும்.

குறிப்பு:—இதன் மத்தியிலுள்ள சாண்டினி ஸ்டேஷனிலிருந்து 6 மைலில் அசிகர் கோட்டையின் மேல் அசுவத்தாமா கோயிலிருக்கிறது. ஷை காண்டுவா ஜங். ஸ்டேஷனிலிருந்து ஆத்ராஸ் ஜங். ஸ்டேஷனுக்குப் போகும்மார்க்கம் பின்னாலிருக்கிறது. ஆத்ராஸ் ஜங். ஸ்டேஷன் காசியிலிருந்து ஹரித்துவாரத்திற்குப் போகும் மார்க்கத்திலுள்ளது.

காண்டுவா ஜங். ஸ்டேஷனிலிருந்து, இட்டார்சி ஜங். ஸ்டேஷன் மார்க்கமாய், ஜப்பல்பூர் ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும.

குறிப்பு:—ஜப்பல்பூருக்கு 6 மைலிலுள்ள நர்மதை நதத்தில் பாணலிங்கம் அகப்படும். இவ்விடத்திற்கு ஓங்காரமென்றும் பெயர்.

ஜப்பல்பூர் ஜங். ஸ்டேஷனிலிருந்து, கட்நி ஜங். ஸ்டேஷன் மார்க்கமாய், மாணிக்கப்பூர் ஜங். ஸ்டேஷனுக்குப்போக வேண்டும்.

குறிப்பு:—மாணிக்கப் பூரிலிருந்து, சித்திரகூடத்திற்குப் போகும் மார்க்கத்தில் வான்மீகரிஷி ஆச்சிரமம் இருக்கின்றது.

மாணிக்கப்பூர் ஜங். ஸ்டேஷனிலிருந்து, நானி ஜங் ஸ்டேஷன் மார்க்கமாய் அலகபாத் ஜங். ஸ்டேஷனுக்குப்போக வேண்டும்.

குறிப்பு:—அலகாபாத் என்பது பிரயாகை இவ்விடம் கங்கையும் யமுனையும் சரசுவதியும்சேரும் திருவேணிசங்கமம்.

அலகபாத் ஜங். ஸ்டேஷனிலிருந்து, நானி ஜங். மோகல் சராய் ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய் பனாரிஸ் ஜங். ஸ்டேஷனுக்குப்போய் இங்கிருந்து காசிகட்டம் ஸ்டேஷனுக்குப்போக வேண்டும்.

☞ இதற்குச் சமீபத்தில் காசி க்ஷேத்திரமிருக்கின்றது.

காசியிலிருந்து ஹரித்துவாரத்திற்கு மார்க்கம்.:—

பனாரிஸ் ஜங். ஸ்டேஷனிலிருந்து மோகல் சராய் ஜங். நானி ஜங். அலகபாத் ஜங். (கங்கைக்கரையிலுள்ள) கான்பூர் ஜங். டாண்டுலா ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய், ஆத்ராஸ் ஜங். ஸ்டேஷனுக்குப் போகவேண்டும்.

(சென்னபட்டணத்திலிருந்து காசிக்குச் செல்லும் மற்றோர் மார்க்கத்திலுள்ள) காண்டுவா ஜங். ஸ்டேஷனிலிருந்து இந்த ஆத்ராஸ் ஜங். ஸ்டேஷனுக்கு மார்க்கம்:—

காண்டுவா ஜங். ஸ்டேஷனிலிருந்து, பாட்டிப்பாத் ஜங். ஸ்டேஷன்மார்க்கமாய் உஜ்ஜினி ஜங். ஸ்டேஷனுக்குப்போக வேண்டும்.

குறிப்பு:—உஜ்ஜினி என்பது அவந்திமாநகரம் இதில் ஆடகேசுரம், தாரகேசுரம், மாகாளேச்சுவரம் என்னும் திருமாங்களுடைய சிவாலயமிருக்கின்றது.

உஜ்ஜினி ஜங். ஸ்டேஷனிலிருந்து, ரத்துலம் ஜங். ஸ்டேஷன்மார்க்கமாய் ஆஜ்மீர் ஜங். ஸ்டேஷனுக்குப் போக வேண்டும்.

குறிப்பு:—ஆஜ்மீருககுச் சமீபத்தில் புஷ்கர க்ஷேத்திர

ரத்துலம் ஜங். ஸ்டேஷனிலிருந்து மேற்காக ஆனண்டு ஜங். ஆமதாபாத்து ஜங். வீராம்காம் ஜங். வாடுவான் ஜங். ராஜகாட் ஜங். ஜெட்டால்சர் ஜங். வீராவால் ஸ்டேஷன்கள் மார்க்கமாய் சோமநாதத்திற்குப் போகலாம் சோமநாதத்தில் சிவக்ஷேத்திரமிருக்கிறது. இதற்குச்சமீபத்தில் பிரபாசமிருக்கிறது.

மேற்கண்ட ஜட்டால்சர் ஜங். ஸ்டேஷனிலிருந்து போர்பந்தர் (குசேலபட்டணம்) ஸ்டேஷனுக்குப்போய், இங்கிருந்து கரைமார்க்கமாயாவது ஸ்டீமர் மார்க்கமாயாவது துவாரகைக்குப் போகலாம்,

ஆஜ்மீர் ஜங். ஸ்டேஷனிலிருந்து, பூலீரா ஜங். பண்டுகி ஜங். அச்நீரா ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய், மேற்சொன்ன ஆத்ராஸ் ஜங். ஸ்டேஷனுக்குவந்து சேரலாம்.

குறிப்பு:—ஆத்ராஸ் ஜங்ஷனுக்கும், ஆச்நீரா ஜங். ஸ்டேஷனுக்கும் மத்தியில் மதுரை ஸ்டேஷன் இருக்கிறது. இம்மதுரை காளிந்தி நதிக்கரையிலிருக்கிறது. இதற்கு காதவழிக்குள் கோகுலம், விருந்தாவனம், கோவர்த்தனம் இவைகளிருக்கின்றன

அச்நீரா ஜங். ஸ்டேஷனிலிருந்து ஆக்ரா ஜங். ஸ்டேஷனுக்குப் போகலாம் ஆக்ரா யமுனையாற்றின் கரையிலிருக்கிறது.

ஆக்ராஸ் ஜங். ஸ்டேஷனிலிருந்து, அலிகர் ஜங். காஜி பாத் ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய், யமுனையாற்றின்கரையிலுள்ள டில்லி ஜங். ஸ்டேஷனுக்குப்போகவேண்டும்.

குறிப்பு:—டில்லி ஓர் விநோதநகர் இது இந்திரப்பிரத்தம்.

டில்லிக்கும் சாரங்கபபூருக்கும் மத்தியிலுள்ள மீரட்டு ஸ்டேஷனுக்கு 20 மைலில் அத்தினபுரமும், டில்லிக்கும் உம்பாலாவுக்கு மத்தியிலுள்ள தனேசர் ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் குருக்ஷேத்திரமு மிருக்கின்றன.

டில்லி ஜங். ஸ்டேஷனிலிருந்து, சாரங்கப்பூர் ஜங். லாக்ஸர் ஜங். ஸ்டேஷன்கள் மார்க்கமாய், ☞ ஹரித்துவாரம் போய்ச்சேரலாம்.

## யாத்திரை வாசிகளுக்கு எச்சரிக்கை.

நீராழி சூழ்ந்திலகும் பன்னாட்டினுஞ் சிறந்த நம் பரதநாட்டின்கண் அநேக சிவக்ஷேத்திரங்கள் நிறையப்பெறினும் பகீரதனது கங்கையை யருகுடைத்ததாயுள்ள ஸ்ரீகாசி மஹாக்ஷேத்திரம் அணுதிகால முத்தி க்ஷேத்திரங்களெல்லாவற்றுள்ளும் சிறந்த விதேக முத்தி க்ஷேத்திரமாதலின் எவ்வகை பாவம்செய்தோராயினும் இங்கு யாத்திரைவந்து கங்கையில் பணிவோடு ஸ்நானஞ்செய்து ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமானை பக்தியோடு தரிசித்து யாத்திரைமுடித்து போவாரேயாகின் சகலவிதமான பாவங்களும் நிவர்த்தியாகி நற்பயனடைவர் என நம் மதநூல்களில் அனேகம் கூறப்பெற்றிருக்கின்றன. ஸ்ரீ காசிக்கு யாத்திரை செல்பவர் அங்கு பணஆசை பிடித்த புரோகிதர், பண்டா, சாஸ்திரி என்ற வகுப்பார்களின் வலையிலகப்பட்டு தாம் காசிக்கு யாத்திரை சென்ற சுகத்தை முழுதும் அனுபவிக்காது வீணே பணத்தை செலவுசெய்துவிட்டு திரும்பிவிடுகின்றனர். ஆதலின் அவ்விதமான இடஞ்சலை நிவர்த்திக்கும்பொருட்டு மூன்று நாளையில் காசி யாத்திரைகளை செவ்வனே முடித்துக்கொள்ளும் விப

ரங்களை புத்தகரூபமாய் வெளியிட்டால் நம் தமிழ் தேசத்தவரு க்கு மிக பயன்படுமெனக்கருதி இதை எழுதலானோம்.

## முதல் நாள்.

அதிகாலை:—அருண உதயம், மணிகர்ணிகா கட்டத்தில் ஸ்நானம், ஸ்நானத்துக்குப்பின் ஸ்ரீவிஸ்வேஸ்வரர், ஞாணவாபி, அன்னபூரணி, விசாலாக்ஷி, தொண்டிவிநாயகர், சாக்ஷிவிநாயகர், காலவைரவர் முதலிய சந்நிதிகளில் தரிசனம்.

பிற்பகல்:—12-மணிக்குள் போஜனம் முடித்துக்கொண்டு ஆதிவிஸ்வேஸ்வர், துர்க்கை அம்மன், கௌடிஅம்மன், கேதாரீஸ்வரர், அனுமந்தகட்டத்திலுள்ள அனுமார் முதலிய சந்நிதிகளில் தரிசனம்.

## இரண்டாம் நாள்.

காலை தசாஸவமேத கட்டத்தில் ஸ்நானம்செய்து முடித்துகொண்டு ஒரு போட்டை (தோணி) அமர்த்திகொண்டு அஸிகட்டம்போய் அங்கு ஸ்நானஞ்செய்துகொள்ள பிரியப்பட்டால் செய்கிறது அல்லது புரோக்ஷித்துக்கொண்டு அதிலிருந்து சிவாலாகட்டம், அனுமார்கட்டம், ஹரிசந்திரகட்டம், கேதாரகட்டம், தசாஸவமேதகட்டம், மணிகர்ணிகாகட்டம், பஞ்சகங்கா கட்டம், வருணைசங்கம்முதலிய கட்டங்களுக்குபோய் தரிசித்துக்கொண்டு 10-மணிக்குள் திரும்பிவிடுதல்.

பிற்பகல்:—கண்களைக் கவரும்படியான பலவிதமான கலர்களுடன் அமைந்துள்ள மரபொம்மை, செப்புமுதலியன விற்கும் சவுக்பஜார், அழகான பித்தளைபாத்திரங்கள் விற்கும் தட்டோரி பஜார்முதலிய பஜார்களை பார்த்துக்கொண்டுதிரும்புதல்.

## மூன்றாம் நாள்.

காலை கேதாரகட்டத்தில் ஸ்நானஞ்செய்து முடித்துக்கொண்டு வைதீகவிஷயமான தீர்த்த விராரத்ததம், கங்காபூஜை முதலியன நடத்திக்கொள்ளுதல்.

## முன் சுப்பிரமணிய க்ஷேத்திரங்களாயிருந்த தலங்கள்.

1. திருப்பதி (வடநாடு) இது இப்போது வெங்கடேசப்பெருமாளென்னும் விஷ்ணுமூர்த்தி நிவாசஞ்செய்யுந்தலமாயிற்று. இதைச்சைவசமயிகள் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகளுடைய குன்று தோறாடல்களிலொன்றாகச் சொல்லுகின்றனர். அவர்கள் இது பாலசுப்பிரமணிய க்ஷேத்திரமென்றும்; இந்த மூர்த்திக்கு எந்த விஷ்ணு ஸ்தலத்திலுமிராத வில்வார்ச்சனையும், சடைமுடியும், நாகாபரணமும் இருக்கின்றனவென்றும்; நின்ற திருக்கோலங் கொண்டெழுந்தருளியிருக்கும் இந்த மூர்த்திக்கு, இருபாதநடுவில் இவர் அர்ச்சிக்கும் சிவலிங்கமிருப்பதால், அது யாவருக்கும் தெரியாதிருக்கும்பொருட்டு இந்த மூர்த்தி கணுக்கால் மேல்வரையில் மறைப்பட்டிருக்கின்றனதென்றும்;

எந்த பெருமாளுக்கும் அமைத்திருக்கும் சங்கு சக்கரங்களிந்த மூலவருக்கில்லாதிருந்ததை யறிந்த உடையவர், எப்படியாவது இவருக்குச் சங்குசக்கரங்களை யமைத்து, இந்த க்ஷேத்திரத்தை விஷ்ணு ஸ்தலமாக்க வேண்டுமென்னும் எண்ணங்கொண்டவராய், அவர்காலத்திலிருந்த சங்கராசாரியருடன் பலவாறாக சாஸ்திரவாதஞ்செய்தும் பயன்படாமையால், வேறுவிதமாகத் தன்கருத்தை நிறைவேற்றவிரும்பி, அத்தேசத்தரசன் சமூகத்தில் தானும் சங்கராசாரியரும் அவரவர் தெய்வத்துக்குரிய சின்னங்களைச் செய்துகொண்டுவந்து சுவாமி சந்நிதியில் அர்த்தசாமமானபின் வைத்துக் குச்சுபோட்டு, கோயிலுக்கு வெளியில் தங்கியிருந்து, மறுநாள் காலையில் கதவைத்திறந்து பார்க்கும்போது, சுவாமி எதைத்தரித்திருக்கின்றாரோ, அந்தத் தெய்வமாகவே நிச்சயிப்போமென்னும் ஒரு ஏற்பாட்டைத் தீர்மானித்துவந்து, அப்படியே சிவசின்னங்களையும், விஷ்ணு சின்

னங்களையும் செய்துவைத்து கதவடைத்து வெளியில்வந்து தங்கியிருந்தபோது, நடுராத்திரியில் உடையவர் பாம்பு உருவம் எடுத்து (உடையவர் சேஷாவதாரர் என்றும், வேண்டும்போது இவ்வுருவமெடுத்து இன்னும் அனேககாரியங்களைச் செய்திருக்கின்றனரென்றும் வைணவர் கிரந்தங்களில் சொல்லியிருக்கின்றது.) உள்ளேபோக வேறுவழியில்லாமையால் கோமுகத்து வார வழியாக கெற்ப குடிக்குள்ளே மோசடியாக நுழைந்து மூலவருக்குத்தான் செய்துவைத்திருந்த சங்கு சக்கரங்களைத் தரித்திருக்கும்போது, இச்சூதை யறிந்த சங்கராச்சாரியர் அந்த கோமுகத்துவாரத்தை யடைத்து, அரசனை வரவழைத்து, கதவைத்திறந்து, உள்ளே உடையவர் நின்றிருப்பதை அரசனுக்குக்காண்பித்தனர். உடையவர் பயந்து நடுநடுங்கி தலையிறக்கங்கொண்டு இருப்பதைப்பார்த்த சங்கராச்சாரியர் மனமிரங்கி, அவர் முகவாட்டத்தை மாற்றவும், அரசனால் அவருக்குக்கெடுதி நேரிடாதிருக்கவும், உள்ளங்கொண்டவராய் உடையவரைப்பார்த்து "உமதிஷ்டப்படியே சுவாமிக்குச் சங்கு சக்கரங்களேயிருக்கட்டும்" என உத்திரவளித்தனரென்றும்; அதனால் அது முதல் இப்போதும் சுவாமிக்குத் திருமஞ்சனமாகுந் தீர்த்தம் கோமுகவழியாய் வாராமல் இறைத்து ஊத்துகிறார்களென்றும்;

பரதகண்டத்தில் எந்த காலத்திலும், எந்தத்தலத்திலுமிருக்கின்ற எந்தவிஷ்ணுமூர்த்திக்கும் சிலை, சுதை, மரம், உலோக முதலிய எந்தசம்பந்தமாயினும்) சங்கு சக்கரங்கள் இன்றி யமையாததாயிருந்து, திருவுருவத்தோடு அபேதமாய்செய்யப்பட்டிருக்க, இந்த ஒருதலத்தில் மாத்திரம் தொடுப்பாக எடுக்கவும், வைக்கவும், கூடுமான பின்னசம்பந்தத்தோடு சங்கு சக்கரங்கள் இருப்பதே இத்தலமும் மூலவரும் ஏற்பட்டகாலத்தில் விஷ்ணுஸ்தலமானதல்ல வென்பதற்குச் சாக்ஷியென்றும் இந்தமலையிலிருக்கும் தீர்த்தம், எப்போதும் யாவராலும் சுவாமிதீர்த்தமென வழங்கிவருகின்றதென்றும், சுவாமி என்பது முருகக்கடவுளுக்கு

இந்நுதற்பெயரென்றும், இதற்குச் சுவாமி மலையென்பதே சான்றென்றும்;

வேங்கடசுப்பு என்று இப்போதும் மக்கட்குப் பெரியோர்கள் பெயரிட்டுவருவதநுபவசித்தம். வேங்கடமென்னும் திருமலையில்வாழும் சுப்பராயர் என்பது அதன் கருத்தாம். வேங்கடமலைக்கும் சுப்பராயருக்கும் சம்பந்தமில்லாமல் இப்பெயர் உண்டாவதற்குக் காரணமிராதென்றும்; இந்தச் சுப்பராயரை மாற்றவெண்ணிய வைணவத்தலைவர், முன்னில்லாத சங்கு சக்கரங்களைப் புதிதாய்க்கொண்டுவந்து சேர்த்ததேயன்றி, அந்தச் சுப்பராயரது மூர்த்தத்தை எடுப்பித்து அப்புறப்படுத்தியதில்லை அதனால், இப்போதிருப்பவர் சங்கு சக்கரமேந்திய சுப்பராயரேயன்றி வேறில்லையென்றும், சங்குசக்கரங்கள் பரமசிவனுடைய ஆயுதங்களென சநற்குமாரசங்கிதையிலும், மார்க்கண்டேயத்திலுஞ்சொல்லியிருப்பதால், அவை அவரது திருக்குமாரரது கரத்திலிருப்பதால் குற்றமில்லையென்றும்; வைணவர்கள் விஷ்ணு மூர்த்தி யென்று சொன்னமாத்திரமாய்க் கௌரவம்பாராட்டிக் கொள்ளினும், அங்கிருந்து அடியார்களது அபீஷ்டங்களைப்பூர்த்திசெய்தருளும் பரமதயாளுவாயுள்ளவர் ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளென்பதே சத்தியமென்றும்; குன்றுகளுக் கதிகாரியாயிருப்பவர் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமியேயல்லது விஷ்ணுவல்ல வென்றும்;

சொல்லுவதுடன் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி பிரமதேவனைச்சிறையிலிட்டு, இம்மலைக்கெழுந்தருளி, உலகசிருட்டி முதலியவற்றை நடத்திவந்தனரென ஸ்கந்தபுராணத்தில் சொல்லியிருக்கிறதென்றும்;

ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகளுக் கடியாரான அருணகிரிநாதரால் இந்தத்தலம பாட

பெற்றனர்.

## இதற்குவைஷ்ணவர்கள் சொல்லும் கோட்பாடு

வில்வார்சசனைக்குக் காரணம்:— திருமாலுக்குத் துளசி தளம் எப்படிப் பிரீதியோ அப்படியே இலட்சுமிதேவிக்கு வில்வதளம் பிரீதியென ஸ்ரீசூக்தத்திலும் புராணங்களிலும் சொல்லியிருப்பதாலும்; இங்கு மூலவர்வட்சுஸ்தானத்துள் பிராட்டியார் வசித்திருக்கையால், திருவேங்கட முடையானுக்கு வில்வார்ச்சனைநடக்கிறதென்றும்;

சடைதரித்திருப்பதற்குக் காரணம்:— இருடிகள் உத்திரவுப்படி பிருகுமகாமுனிவர் திரிமூர்த்திகளின் குணதிசயங்களைச் சோதிக்கும்பொருட்டு வைகுந்தத்துக்குப்போய் திருமால் மார்பிலுதைக்க, அங்குவசித்திருந்த இலட்சுமிதேவியார் பிணங்கிக்கொண்டு கோதாவிரிதீரத்தில் கொல்லாபுரியி லெழுந்தருளியபோது (சிலகிரந்தங்களில் இலட்சுமிதேவியார் பிணங்கி பாதாளலோகத்தில் கபிலமகாமுனி ஆச்சிரமத்தில் தங்கியிருந்ததாகச் சொல்லியிருக்கின்றது) மறுபடியும் அந்தத்தேவியாரையடையும் நிமித்தம் மகாவிஷ்ணுசடைமுதலிய தவக்கோலங்கொண்டு இந்தத்தலத்தில் தவஞ்செய்து தேவர்களுக்குச்சேவை சாதித்த கோலத்தோடிருக்கின்றன ரென்றும்;

நாகாபரணத்தரித்திருப்பதற்குக் காரணம்:— நாராயணவனத்தில், ஆகாசராஜன் தன் குமாரத்தியாகிய பதுமவல்லித் தாயாரை வேங்கடேசப் பெருமாளுக்குத் திருக்கலியாணஞ் செய்துகொடுத்தபோது அவன் சமர்ப்பித்த நாகாபரணங்களை யணிந்திருக்கின்றனரென்றும்;

சங்கு சக்கரங்களில்லா திருந்ததற்குக் காரணம்:—வேங்கடேசப்பெருமாள், தன்பக்தனான தொண்டமான் சக்கரவர்த்திக்கு அவன் சத்துருக்களைச்செயிக்கத்தன்னுடைய சங்கு சக்கரங்களைக் கொடுத்துவிட்டதாயும், சத்துக்களைச்செயித்த பின்பு

மீளவும் திவ்யவாசனந்த சங்கு சக்கரங்களைக் கொண்டுவந்தபோது, வேங்கடேசப்பெருமாள் "கலியுகத்தில் என்பக்தன் எனக்கு சங்குசக்கரங்களைச்செய்துவந்து சமர்ப்பிக்கப்போகிறான், அவற்றைநான் அணிந்துகொள்ளுகிறேன், இவற்றை நீயே வைத்திருந்துன் சத்துருக்களைச்செயித்திரு" வென்று அநுக்கிரகித்தமையால் சங்கு சக்கரங்களில்லாதிருந்தனரென்றும். பிற்காலத்தில் உடையவரானவர் மேற்சொல்லிய இக்குறிப்புள்ள வற்பாட்டின்படி மறுநாள் காலையில் கோயிற்கதவைத்திறக்க தெய்வீகமாய மூலவர் சங்குசக்கரங்களைத் தரித்திருந்ததால் விஷ்ணு ஸ்தலமாயினதென்றும் சொல்லுகின்றனர்.

இவ்வாறாக இப்படியிருக்க, கோயில் சிற்பசாஸ்த்திரத்தில் வல்லவர்களான சிற்பசாஸ்திரிகள் இந்தத் தலத்திலுள்ள கெற்பகுடியின் ஆயாதி அளவினால், இதுவிஷ்ணு கோயிலைச் சார்ந்ததல்லவென்றும், சுப்பிரமணியர் ஆலயத்தைச்சார்ந்த தலமென்றுஞ்சொல்லி சக்திகோயிலென ஸ்தாபிக்கின்றார்கள். அதற்குத் திஷ்டாந்தமாக இப்போதும் இக்கோயிலின் மதில்களின்மேல் நான்குபுறத்திலும் வைத்திருக்கும் உருவங்கள் சிங்கரூபமாகவே ஸ்தாபித்திருக்கின்றன.

2. கள்ளழகர்கோயில்:—(பாண்டியநாடு) இது திருமாலிருஞ்சோலையென்றும், சோலைமலையென்றுஞ்சொல்லப்படும்.

இந்தத்தலம் நக்கீரர், அருணகிரிநாதர்முதலிய அடியவர்களால் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகளுடைய ஆறுபடை வீடுகளிலொன்றாகப் பாடல் பெற்றிருக்கின்றது.

இந்தத்தலத்தில், ஒரேபீடத்தில் மூலவரும் அவருக்கிருபுறத்தில் இரண்டுதேவியாரும், நின்றதிருக்கோலமாயெழுந்தருளியிருக்கின்றனர். இந்தச்சேவை சுப்பிரமணியர் தலங்களிலன்றி சாதாரணமாக மற்றவிஷ்ணுக்ஷேத்திரத்திலுமில்லை.

# விநாயகபாராக்கிரமம்.

இதனால் கல்விகேள்விகளிற் சிறந்தகனதனவான்களுக்கு தெரிவிப்பதாவது:- இது வேதாகம புராணேதிகாசங்களை யாதாரமாகக்கொண்டு தெளிவான தமிழ்நடையில் சர்வதேவோத்கிருஷ்டமானசிவபராக்கிரமம் முதலிய அனேக அரியபெரிய நூல்களின் உரையாசிரியரான சைவஸ்ரீ ம. தி. பானுகவியவர்களால் சமஸ்கிருதபாஷையினின்று தமிழில் அழகாகவெழுதப்பட்டது. இதுகாறும் வெளிவராதது, படிக்கப்படிக்க இனிமையைத்தருவது, பார்ப்பதற்கு அழகிய 73-படங்களுடன் அச்சிட்டுள்ள விநாயகப்பெருமான் உலகரக்ஷணார்த்தமியற்றிய பராக்கிரமங்களையறிதற்கு தக்க நூலிதுவேயாம். ஒவ்வொருவரும் வாங்கிவாசிக்கவேண்டியது. இதற்கமைத்துள்ள விலை ரூபா 1 8 0

கிரகஸ்தாஸ்ரம சுபோதினி யென்னும்

# இல்லறசாரசங்கிரகம்.

பெறுவதற்கரிய மானிடதேகத்தைப்பெற்ற ஒவ்வொருவரும் அறம்பொருள் இன்பம்வீடென்னும்சதுர்வித புருஷார்த்தங்களையுஞ் சுலபமாய அடையக்கூடியவழி இல்லறமொன்றேயென சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிலே சொல்லப்பட்டிருத்தலால், அவ் வில்வாழ்க்கையினின்ற ஸ்திரீ புருடர்கள் அநுசரித்து நடக்கவேண்டிய ஒழுக்கம், ஆசாரம், தெய்வபக்தி, ஆலயதரிசனம், விரதம் முதலியபல சற்கருமங்களையும் அவைகளையும யனுஷ்டிக்கவேண்டிய கிரமங்களையும் அவற்றால் அடையும் பலாபலன்களையும், யாவரும எளிதிலுணரும்படி மிகவும் தெளிய செந்தமிழ் வசனநடையில் அச்சிட்டு விலைக்குத் தயாராயிருக்கின்றது இந்நூல் ஒவ்வொருகுடும்பத்திலும் இருக்கவேண்டியது அத்தியாவசிய மாகையால் இந்நூலை ஒவ்வொருவரும் வாங்கி ஆனந்தித்துப் பிரபலப்படுத்தக் கேட்டுக்கொள்ளுகிறனம். இதன் விலை அணா 10.

" எமது விலாசம்:—சிவநேசன் அண்டு கோ.,

வேப்பேரி போஸ்டு, மதராஸ்.

# COMMERCIAL COMMODITIES

BY

FRANK MATTHEWS
B.Sc., A.I.C., F.C.S.







LONDON
SIR ISAAC PITMAN & SONS, LTD.
PARKER STREET, KINGSWAY, W.C.2
BATH, MELBOURNE, TORONTO, NEW YORK
1921

# PREFACE

THE purpose of this book is to give to the student and the general reader a not too detailed idea of the more important raw, or semi-manufactured, articles used in trade. It is no part of the aim of the work that it should pretend to instruct the skilled craftsman or technician concerning the material used by him in his own particular avocation It should, however, be able to inform him on allied subjects.

A special study of any particular commodity must entail onsultation of works specifically on that subject or of books of ider scope than this Amongst such could be recommended the dmirable "Common Commodities and Industries Series," issued y the publishers of this volume; "The Westminster Series"; r. Hutchinson's *Food and Dietetics*, Thorpe's *Dictionary of pplied Chemistry*, and the weekly "Trade Supplement" to *he Times*.